உ

திருச்சிற்றம்பலம்

அகத்திய முனிவர்

அருளிய

# பின் எண்பது



தமிழ்ப்புலவரும்,

மருத்துவாசிரியருமான

திரு. மா. வடிவேலுமுதலியாரவர்கள்

எழுதிய

உரையுடன்





'கலாசிந்தாமணி' பதிப்பாசிரியர்

மயிலை க. மாணிக்கவேல் முதலியார்

பதிப்பித்தது

விலை

## அகஸ்தியர் வைத்தியம் 0 12 0

இதில் ஒவ்வொரு நோய்க்கும் எளிதாக முடிக்கக்கூடிய அருமையான முறைகளே சொல்லப்பட்டிருக்கின்றன. வைத்தியர்களுக்கு இன்றியமையாத முப்பூ முதலிய உயர்ந்த முறைகளும் அடங்கியிருக்கின்றன இதிலுள்ள பாடல்கள் சொல்லழகும் பொருளழகும் இனிமையாக அமைந்தவை. கைபாகம் செய்பாகம் நன்கு விளங்கும்படி பதவுரை, கருத்துரை முதலியன மிகத்தெளிவாக எழுதப்பட்டுள்ளன.

## வைத்தியத்திரட்டு 0 12 0

வைத்தியர்கள் இந்நூலைக் கொண்டு சிகிச்சை செய்வார்களானால் மிக விரைவில் பிரசித்தியடைவார்கள்; வைத்தியர்கள் அல்லாத குடும்பஸ்தர்கள் இந்நூலைக் கையாளுவார்களானால் தக்க வைத்தியர்கள் கிடைக்க முடியாத காலத்திலும் அவசரமான சமயங்களிலும் தாமே அச்சமின்றி சிகிச்சை புரியலாம். ஒவ்வொரு முறையும் மிக இலேசாக முடிக்கக்கூடியது. நோய்களின் குணங்களும் நன்கு விளக்கப்பட்டுள.

## வீரமா முனிவர் நசகாண்டம் 0 6 0

இஃதொரு அரிய வைத்தியநூல் எல்லாவித நோய்களுக்கும் எளிதில் முடிக்கக் கூடிய முறைகள் அடங்கியது இதிலுள்ள முறைகள் யாரும் சுலபமாய் செய்து கையாளும்படி பார்ட்டும் விளக்கமான உரையுமாக எழுதி அச்சிடப்பட்டிருக்கின்றன.

## ஸத்வைத்திய ஜீவனம் 0 8 0

இவ்வரிய நூல் அநேக நூற்றாண்டுகளுக்கு முன் 'லோலம்ப ராஜா' என்னும் மகரிஷியால் வடமொழியில் (ஸமஸ்கிருதம்) இயற்றப்பட்டது. வடமொழி நூல்களில், சரகம், சுஸ்ருதம், வாக்படம், பசவராஜீயம், சிந்தாமணி முதலிய வைத்திய சாஸ்திரங்களே தலைமையாய் விளங்குவன; அவையெல்லாம் மிக விரிவாய் இருத்தலினால் அவற்றின் முக்கியமான— முறைகளை மாத்திரம் ஒருங்குசேரத் திரட்டியதாகும். சகலவித நோய்களின் நாடியும், குணமும்,மிகச் சுலபமாய்த் தெரிந்துகொள்ளும் வழியும் ஒவ்வொரு நோய்க்கும் பலவிதமான சிகிச்சைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன.

## அமரேசன் 0 8 0

இது படிக்கப் படிக்கத் தெவிட்டாத இன்பம் பயக்கும் ஓர் அற்புத இங்கிலீஷ் நாவலின் தெளிவான மொழி பெயர்ப்பாகும். இதை ஒரு முறை படித்தவர்கள் திரும்பத் திரும்ப படிக்கவேண்டுமென்ற ஆவலுடையவர்களாவார்கள். கதையில் நிகழும் விஷயங்கள் மிக்ருசிகரமாயும் வியக்கத் தக்கதாயு.மிருக்கும்.

## பிள்ளையார் துதியும் கதையும் 0 1 6

இதனில் பிள்ளையாரை வழிபட்டு முத்தி பெற்றவர்களின் வரலாறுகளும், பிள்ளையாரை வழிபட வேண்டிய முறைகளும், பிள்ளையார் கவசம், பிள்ளையார் அகவல், வேழமுகம் முதலிய நூல்களும் அடங்கியுள்ளன. சிறந்த அழகிய பதிப்பு.

உ

திருச்சிற்றம்பலம்

அகத்தியமுனிவர்

அருளிய

# பின் எண்பது



தமிழ்ப்பண்டிதரும்

மருத்துவாசிரியருமான

**திரு. மா. வடிவேலுமுதலியாரவர்கள்**

எழுதிய

உரையுடன்





'கலாசிந்தாமணி' பதிப்பாசிரியர்

**மயிலை க. மாணிக்கவேல் முதலியார்** 1-50

வெளிப்படுத்தியது

பதிவு செய்தது] 1927 [அ

# பதிப்புரை

வெய்யிலிற் காய்ந்தபின்னரே நிழலருமை விளங்குதல் போல எண்ணிலாத நெடுங்காலம் துன்பத்தி லுழன்றதற் பின் இதுபோழ்து தமிழ் மக்கள் தம் முன்னோரது பழந் தமிழ்க் கலைகளையும், பழந்தமிழ் வாழ்க்கைகளையும் கைக்கொண்டு இன்புற வேண்டுமென்னும் நல்லறிவு தலைக் கூடியுள்ளனர். இந்நிலையிலே பழந்தமிழ் மருத்துவத்திலே பற்றுள்ளங்கொண்டு முயல்வோரும் உள்ளர். ஆயின், பழந்தமிழ் மருத்துநூல்கள் பிழை நூல்களாகத் திரிந்து கிடத்தலானும், பொருள் எளிதிற் காணற்கரிதாந் தன்மையவாக இருத்தலானும் இத்துறையிலே முயல்வோர்க்கு ஊக்கம் குன்றிப்போதல் எளிதாம். ஆகலின், இப்பெற்றிய குறைகள் ஒழிக்கப்பட்டாலன்றி நலனுண்டாகாது. இவ்வரும் பெரும் செயலை எல்லாரும் மேற்கொள்ளுதல் இயலாது. தமிழ்மொழிப் பயிற்சியிலே நிரம்பிய அறிவும் மருத்துவத் துறையிலே சிறந்த பயிற்சியும் ஒருங்கே அமையப்பெற்ற பேரறிஞர்கட்கே ஆவதொன்றாம். இவ்விரு துறையிலும் நுண்மாண் நுழைபுலம் வாய்ந்த பெரியார் நம் தமிழ் நாட்டிலே ஒரு சிலராயினும் இருப்பர் என்பது திண்ணம். ஆயினும் இதுகாறும் எவரும் இக்குறையை அகற்றி உறுதுணை புரிவான் முன்வந்தோர் இலராக, இவ்விழிமை நிலைபெறு வண்ணம் திருவருட்டுணையால், தமிழ்ப்புலவரும் மருத்துவ ஆசிரியரும் ஆகிய பெரியார் திருவாளர் மா. வடிவேலு முதலியார் அவர்கள் துணைபோந்துள்ளார்கள். இவர்கள் இலக்கிய இலக்கணங்களிலும், ஒரும் வேதாந்தத்துச்சியிற் பழுத்த ஆராவின்ப அருங்கனி பிழிந்து சாரங்கொண்ட சைவ சித்தாந்தத்துறையினும் துறைபோகப் பயின்றவர்கள் என்பதும், மருத்துவப் புலமையினும் நிரம்பிய தேர்ச்சிபெற்றவர்கள் என்பதும், இவர்கள் இதுகாறும் பார்வையிட்டு வெளிப்படுத்துள்ள நூல்களானும் உரைகண்ட நூல்களானும் தமிழ் உலகம் நன்கு அறிந்திருக்கும்.

இவர்கள் எமது விருப்பப்படி இதற்கு முன்னர் பல வடமொழி மருந்து நூல்களைத் தமிழில் ஆக்கித் தந்தி

குப்பினும் தமிழ் நூல்களிலே வீரமாமுனிவர் நசகாண்டம் என்னும் அரிய நூலுக்கு அண்மையிலே, ஒரு நல்லுரை அளித்துத் துணைபுரிந்தார்கள். அதனையொப்ப இப்பொழுது அகத்தியர் பின் எண்பது என்னும் அரிய நூலுக்கும் மிக விளக்கமான அரிய உரையெழுதித் துணைபுரிந்துள்ளார்கள். இந்த உரைகளைக் காண்போர்க்கு இவர்களது அரும்பெரும் புலமை நன்குபோதருவதோடு இவர்களது உரைகள் மருத்துவப் புலமையொன்றே பயவாது தமிழ் இலக்கிய இலக்கணப் புலமையும் பயக்கவல்ல தென்பதும் விளங்கும். இனி மேலும் சிதைவுபடுதற்குக் கூடாத அளவு சிதைந்து, பொருள் காணற்கு இயலாது, இருந்தும் பயனற்று வாளாகிடந்த அரிய நூலைத் தமிழ்மொழி மாட்டும் தமிழ்ச் சித்த மருத்துவத்தின் மாட்டும் பற்றிய பேரன்பினாலே மிக அரிதாக முயன்று பொருள் சிறக்கும்படி செப்பஞ்செய்து கற்றோர்க்கும் மற்றோர்க்கும் பயனும்படி விளக்கமமைந்த உரைகண்டு வைத்த இவர்களது உழைப்பின் மிக்க அருந்துணைக்கு எல்லாம் வல்ல இறைவி பாகன் இவர்களுக்குத் தளரா உடல் நலமும் அயரா ஊக்கமுந் தந்து பல சித்த மருந்து நூல்களைத் தமிழ் மக்களுக்கு நல்விருந்தாக நெடுங்காலம் அளித்து வருமாறு திருவருள் புரிய இறைஞ்சுவதன்றி, 'மாரிமாட் டென்னாற்றுங்கொல்லோ வுலகு' என்றபடி தமிழ் உலகு யாது கைம்மாறு செய்யமுடியும் !

யாம் இதுகாறும் பதித்துள்ள இவர்களால் உரை செய்யப்பட்ட மருந்து நூல்களை மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டமைபோல இதனையும் ஏற்றுப் பெரும்பயனடைந்து இது போன்ற நூல்களை வெளியிடுமாறு எமக்கு ஊக்கந்தருவதில் தமிழ்நாடு முன்னையினும் முந்துறு மென்று உறுதி கொள்ளுகின்றோம்.

மயிலை
பிரபவ-சித்திரை

மயிலை க. மாணிக்கவேலன்.

# முகவுரை

இந்நூல் 'பின் எண்பது' என்னும் பெயருள்ளது. இஃது எண்பத்து மூன்று எண்சீர் விருத்தப்பாக்களால் யாக்கப் பட்டது. இஃது அளவாற் பெயர் பெற்றது. இதனை இயற்றியவர் அகத்தியர் என்பர். அகத்தியரைப்பற்றிப் பலர் பலவாறு கூறுகின்றனர். ஆயினும், இந்நூலில் நூலாசிரியரே,

"......பேருன வென்குருவா முருக னூஉங்காப்
பந்நாளி லீசனுப தேசத் தாலே
அகத்தியனென் றென்றனக்குப் பேரு மாச்சு"

என முதற் செய்யுளிலும் 'பதினையிர'த்தில்,

"சித்தனு யிருப்பதற் கின்னங் கொஞ்சஞ்
செப்புகிறேன் மாத்திரையின் பேரைக் கேளாய்
அத்தனு ரெனக்குரைத்தார் சரப ராஜன்
அவனியிலே யுனக்குரைத்தேன் மச்ச கேந்திரா"

எனச் சரபராஜ மாத்திரை கூறுஞ்செய்யுளிலும் புகன்றிருக்கின்றனர். இவ்வாறு இன்னும் பல இடங்களிலும் சொல்லியிருக்கின்றனர். அவை நிற்க,

இங்குக் கூறப்பட்டவற்றால் முருகவேளும், இறைவனும் ஆசிரியர்களாக விருந்து தமக்கறிவுறுத்தினமை நன்கு விளங்குகின்றது.

ஆகையால் இவர் இறைவனுடன் சங்கமிருந்து தமிழாராய்ந்த அகத்தியரே எனக் கொள்வர் மருத்துநூலறிஞர்.

இவர் மென்றமிழிலும், வன்றமிழிலும் நூல்கள் செய்துள்ளார் என்பது 'பூரணநூல் ஆயிரத்தைஞ்ஞூறு', 'பதினறு', 'அறுநூற்றில் இரண்டு காண்டம்', 'எண்பதில் நான்கு' என்பவைகளாதிய மென்றமிழ் நூல்களாலும், 'தமிழ் நாலாயிர வெண்பா' என்னும் மணிநாலாயிரம் முதலிய வன்றமிழ் நூல்களாலும் நன்குணர விருக்கின்றது.

அன்றி, இந்நூலிற் சொல்லப்படாத 'கரிசல்' என்னும் மிக அரிய நூல் ஒன்றும் இவராற் செய்யப்பட்டுளதென்று கூறுப.

மென்றமிழ் நூல்களெல்லாம் பயனற்றவை யென்று கற்றாரிற் சிலர் கூறுவர். அவை பார்வைக் கெளிய நடையினவேயன்றி, ஆராயப்புகின் அச்சொற்களனைத்தும் அரிய ஆட்சிகளாகவே யமைகின்றன. அவற்றை இந்நூல் உரையால் நன்குணர்க.

இவர் முக்காலங்களுமுணர்ந்த ஞானி ஆகலின் இவர்க்கு அறிவு (ஞானம்) சிறப்பு, சித்து பொது.

சித்தர்களுக்குச் சித்து சிறப்பு, ஞானம் பொது. இஃது அன்னார் பேரிலேயே விளங்கற்பாலது.

இங்ஙன மாதலால் அகத்தியர் காலநேர்ந்துழிச்சித்தாட வல்லவரென்றும், சித்தர்கள் எக்காலத்தும் சித்தாடுபவர் என்றுங் கொள்வர் பெரியர்.

ஈதுணராத சிலர் அகத்தியரைச் சித்தர்களில் ஒருவர் என்பர். அது பொருந்தாதென்பதை,

"கோனென்ற ரிஷிதேவர் முனிவர் சித்தர்
கூடியே பொதியில்வந் திருக்கும் போதில்
ஏனென்ற சாத்திரங்க ளெல்லாம் பார்த்தே
எண்பதையு மறைத்துவிட்டா ரெனக்கா ணாதே"

என இந்நூலிலும்,

"தோய்ந்திட்ட பதினெண்பேர் சித்தர் தம்மைச்
சோடசமாய்ச் சொல்லுமென்று கேட்டே னக்கால்
ஆய்ந்திட்ட திதுபோதுங் கும்ப சேயா
மகாமுனிநீ ரறைந்ததுவே போது மென்றார்"

எனப் பதினாயிரத்திலும்,

"சுந்தரி யானிரு
புதல்வர் வடுகர் வீரர்
துர்க்கையனுமார் சாத்தர்
சர்ளிபிச் சாடனர்
நந்திதர் வந்திரி

குறுமுனி சித்தர்கள்
நவக்கிரக மிவர்துணையே"

என மருத்துப் பாரதத்திலும்,

"மத்தசுர காலரருள் வாய்த்தமுனி யாகி
அத்தசுர பூசிதனு மாகுமிது காப்பே"

எனவும்;

"பயப்படு பிரசமுன் பழகு மைச்சுரம்
பயப்படு மாறெனப் பதினெண் சித்தர்தாள்
செயப்படு பொருளினிற் சேர்க்கு முன்னரே
செயப்படு மிதற்கொரு திருகின் றுமரோ"

எனவும் கரிசலிலும் முறையே அகத்தியரும் தேரரும் சித்தரை வேறு பிரித்துக் கூறினமையா லுணரக்கடவர்.

ஆகவே அகத்தியர் பதினெண் சித்தர்களில் ஒருவராக மாட்டாரென்பதொருதலை.

இங்ஙனமாய இந்நூல் பலவகையினுஞ் சிதறுண்டு பிழைபட்டுச் சித்தமருத்துவர்கட்கு ஒரு சிறிதும் பயன்படா வண்ணம் மெல்லியகடிதத்தில்அச்சிடப்பட்டிருந்தது.இதைத் திருவாளர் மயிலை மாணிக்கவேலு முதலியார் கேட்டுக் கொண்டபடி மூன்று ஏட்டுப்பிரதிகளைக்கொண்டு திருத்திப் பயனற்றவை யெனக் கொள்ளக்கிடந்த சொற்களுக்கும் மற்றவற்றிற்கும் கற்றோர்க்கும் மற்றோர்க்கும் நன்கு விளங்கும் படி ஒரு அரிய சொற்பொருளும் (பதவுரை), கருத்துரையும், எடுத்துக்காட்டுகளும், பாடபேதங்களும் காட்டி உரையெழுதி யுள்ளவற்றுடன் அவ்வச் செய்யுள்களுக்கு அடியிலேயே இன்றியமையாத அருஞ் சொற்களுக்கு விளக்கப் பொருளும் எழுதிச் சேர்க்கப்பட்டிருக்கிறது. இந்நூலை மருத்துவங் கற்பார் கற்பின் மருத்துவங் கைவரப் பெறுவதுடன் தமிழ்க்கல்வி யறிவிலும் வல்லுநராவாரென்பது உள்ளங்கை நெல்லிக்கனியாம். இவ்வாறே மற்றைய அகத்தியர் நூல்களையும் சித்தர்கள் நூல்களையும் சீர்திருத்தி உரையெழுதி ஒழுங்குபடுத்தக் கொண்டுள்ள எம் எண்ணத்தை இறைவர் நிறைவேற்றுவாராக.

மா. வடிவேலன்.

உ

திருச்சிற்றம்பலம்

---

அகத்தியமுனிவர்

அருளிய

# பின் எண்பது

## காப்பு

### போது

எண்சீர் விருத்தம்

முன்னூலெண் பதுசொன்னேன் முதலே காப்பு
மூலத்தி னின்றகண பதியைப் போற்றிப்
பின்னூலெண் பதுசொல்ல வாயி காப்பு
பேரான வென்குருவா முருக னாடங்காப்
பந்நாளி லீசனுப தேசத் தாலே
யகத்தியனென் றென்றனக்குப் பேரு மாச்சு
பொன்னான வாதத்தி லக்கம் யாப்பு*
பூட்டினேன் பூரணசூத் திரத்திற் காணே.

கருத்து:—இச்செய்யுள் பல கடவுளர்கள் வணக்கங்களையும், இந்நூற்றலைவற்கு அகத்தியனென்று பேர்

---

(பா - ம்.) *இலக்கங் காப்பு.

வந்த வழியையும், தான் செய்த வாத நூலையும், அந் நூலிலுள்ள சூத்திரத் தொகையையுங் கூறுகின்றது.

சொற்பொருள்:--மூலத்தில் நின்ற - மூலாதாரத்தில் எழுந்தருளியிருந்த, கணபதியை போற்றி-கணங்களுக்குத் தலைமைபூண்ட மூத்த பிள்ளையாரைப் போற்றுதல் செய்து, முன்னூல் எண்பது சொன்னேன்-முதலில் எண்பது பாட்டுகளால் ஒருநூல் பாடினேன், (அதுமுன் எண்பது என்பது) அதை; முதல்-சிவபெருமானே, காப்பு - காத்தருள் செய்வர்; பின் நூல் எண்பதுசொல்ல ஆயிகாப்பு - பின்னர் எண்பது பாட்டுகளால் (பின் எண்பது என்று) ஒரு நூல்பாட இறைவி காத்தருள் செய்வர், பேறுன-நானடைதற்குரிய பேறுகிய, என் குருவாம்-என்னுடைய (நாற்பாதங்களுக்கும் மருத்துவ முதலியவைகளுக்குங்) குருவாகிய, முருகனுங் காப்பு - முருகவேளுங் காத்தருள்வர், அ நாளில் - முற்காலத்தில், ஈசன் உபதேசத்தால் - இறைவனுடைய உபதேசத்தினுல், எனக்கு-எனக்கு, அகத்தியன் என்று - அகத்தியனென்று, பேர்ஆச்சு - பேருண்டாயிற்று, (அங்ஙனமான நான்) பொன்ஆன - பொன் செய்தற்குரித்தான, வாதத்து-வாதஞ்செய்யும் வழியில், இலக்கம் யாப்பு-இலக்கஞ் செய்யுள், பூட்டினேன் - பாடினேன், பூரணசூத்திரத்திற்காண் - பூரணசூத்திரத்திலும் அதைக் காண்பாயாக.

ஏகாரங்கள் இரண்டும் அசைகள். என்றனக்கு என்பதில் தன் சாரியை. (க)

## நூற்றிரேகை

பூரணநூ லாயிரத் திருநூறு சொன்னேன்
பொருளான வாதத்துக் காதி நூறுன்
காரணமாம் வயித்தியத்தி லிரண்டி லக்கம்
கடைப்போக்குப்* பதினாறுங் கண்டு கொள்வாய்
ஆரணமாம் பெருநூலைச் சுருக்கிச் சொன்னே
னாயிரத் தைஞ்ஞூறு மமிர்த மாகுந்†
தாரணியில் வயித்தியத்துக் காதி நூலாய்த்
தமிழ்நாலா யிரவெண்பாச் சாற்றி னேனே.

கருத்து:—இச்செய்யுள் தாமுரைத்த நூல்களின் தொகைகளைச் சொல்லுகின்றது.

சொ - ள்:—ஆயிரத்து இருநூறு - ஆயிரத்திருநூறு செய்யுள்களுள்ள, பூரண நூல் சொன்னேன் - பூரண நூலைப் பாடினேன், பொருள் ஆன - பொன்னாகிய பொருள் செய்வதற்கேற்ற, வாதத்திற்கு - இரசவாதத் தொழில் செய்தற் பொருட்டான, ஆதி நூல் - முதனூல் இதுவே யாகும், காரணம் - நோய்கள் வந்த வழியும், ஆம்-அவைகளுக்குத் தீர்வுகளுமாயுள்ள, வயித்தியத்தில் - மருத்துவத்தில், இரண்டு இலக்கம் - இரண்டிலக்கச் செய்யுள்கள் பாடினேன், கடைப் போக்கு - கடையிற் சொல்லப்பட்ட, பதினாறும் - பதினாறு செய்யுள்களுள்ள சிறு நூலையும், கண்டு கொள்வாய் - நான் செய்ததென்றே உணர்ந்து

(பா - ம்.) *கைம்முறையாம். †ஆயிரத் திருநூறு மிதில் முடிவதாகும்.

கொள்வாய், ஆரணமாம் - தமிழ் மருத்துவ மறை யாகிய, பெருநூலை - மிக விரிந்த நூலை, சுருக்கி - சுருக்கி, ஆயிரத்து ஐஞ்ஞூறு சொன்னேன் - ஆயிரத் தைந்நூறு செய்யுள்களாக ஒருநூல் பாடினேன், அமிர்தமாகும் - அது அமிழ்தன்ன தாகும், (இவை யன்றி) தாரணியில் - உலகத்தில், வயித்தியத்துக்கு - மருத்துவத்துக்கு, ஆதி நூலாய் - முதல் நூலாக, தமிழ் - தமிழ் மொழியில், நாலாயிரவெண்பா சாற்றி னேன் - நாலாயிரம் வெண்பாக்களால் ஒருநூல் பாடி னேன்.

தான், ஏ, அசைகள்.

ஆயிரத் தைஞ்ஞூறு என்பது 'அகத்தியர் காப்பி யம் ஆயிரத் தைந்நூ' றென்பது. தமிழ் நாலாயிர வெண்பா என்றது 'மணி வெண்பா நாலாயிரத்'தை என்றுணர்க. (உ)

சாற்றினே னறுநூற்றி லிரண்டு காண்டந்
தாய்சொல்ல வரன்சொல்லத் தானே பூவில்
ஏற்றினேன் மற்றமற்ற நூல்க ளெல்லா
மிதின்கீழே யாகுமல்லா லேற்ற மில்லை
மாற்றினே னெண்பதிலே சுருக்க நான்கு
வகையறிய வேண்டுமென்று லிந்நூல் பாரு
நீற்றினங்க ளுருக்கினங்கள் செந்தூ ரங்கள்
நிலைப்பதற்கு வழிவிட்டா னேர்ப டாவே.

கருத்து:—இச்செய்யுள் தாம் செய்த நூல்களின் தொகைகளையும், அவற்றின் உயர்வு தாழ்வுகளையும், முப்பூவின் சிறப்பையும் சொல்லுகின்றது.

சொ - ள்:—தாய் சொல்ல அரன் சொல்ல - இறைவியும் இறைவனும் எனக்கு மாணுக்க முறையாய்ச் சொல்ல, பூவில் - இவ்வுலகத்தில், அறுநூற்றில் இரண்டு காண்டம் சாற்றினேன் - அறுநூறு செய்யுள்களுள்ள இரண்டு நூல்கள் பாடினேன், (அவை யல்லாமல்) எண்பதில் சுருக்கம் நான்கு மாற்றினேன் - சுருக்கமாக எண்பது செய்யுள்களாக நான்கு நூல்கள் ஒன்றற்கொன்று மாறுதல்களாகச் சொன்னேன், (ஒரு நூலிலுள்ள பொருள் மற்றொரு நூலிலில்லா வண்ணம் என்க) வகை அறிய வேண்டும் என்றால் - மருத்துவத்தின் வகைகளை உணர வேண்டுமானல், இநூல் பார் - இந்த நூலை யாராய்ந்து பார், (ஏனென்றால்) ஏற்றினேன் - இந்நூலுக்கு வேருகச் சொல்லப்பட்ட, மற்ற மற்ற நூல்கள் எல்லாம் - பல வேறு நூல்களெல்லாம், இதின் கீழே ஆகும் அல்லால்-இந் நூலுக்குப் பொருளிற் குறைந்தனவேயாகுமல்லாமல், ஏற்றம் இல்லை-உயர்ந்தனவாகச் செய்யப் படவில்லை,(ஆகையால்) நீறு இனங்கள் உருக்கு இனங்கள் செந்தூரங்கள்-வெண் பொடிகளும் (பஸ்மங்கள்) உருக்குக்கட்டுகளும் செம்பொடிகளும் (செந்தூரங்கள்) ஆகிய இவைகள், நிலைப்பதற்கு - கை கூடுவதற்கு, (முப்பூ வேண்டும்) வழலைவிட்டால்-முப்பூவை விட்டு விட்டால், நேர் படா - இவைகள் கை கூடா.

தான், ஏ அசைகள்.

அச்சுவினி தேவர்கள் அகத்தியர்க் கறிவுறுத்தினமை மாணுக்க முறையா யிருக்க, இவர் தாயும் அர

னும் தமக்குச் சொன்னார்களெனக் கூறல் வரலாற்று முறையாமோ? வெனின்; ஆம். அம்மாணாக்க முறை யாகக் கற்றவற்றுடன், என்றுமுள்ள முதலாசிரியர் கள்பாலும் கற்றனர் என்பதில் இழுக்கென்னை? எனக்கொண்டு அவ்வாசங்கை யொழிக.

அன்றி, இவர் முக்காலத்தும் ஒப்ப நிகழ்பவ ரென்னும் குறிப்பாலும் அஃதிழுக்காது.

முதற் செய்யுளில்,

'அந்நாளி லீசனுப தேசத் தாலே
அகத்திய னென்றெனக்குப் பேரு மாச்சு'

என்று சொல்லி யுள்ளதாலும் நேராக அவர்கள் பாலும் கற்றிருப்பா ரென்ப தொருதலை.

அல்லாமல், முருகனிடத்தும் கற்றனர் என்ப தும்,

'பேரான வென்குருவா முருகனாஉங்காப்பு'

என்பதாலும் நன்கு விளங்குகின்றது.

ஆகலின் இவர் மாணாக்க முறை ஒன்றிலேயே அடங் காதவரென்ப துணரவிருக்கின்றது.

அறுநூற்றில் இரண்டுகாண்டம் என்பன பாண்ட வைப்பு அறுநூறு, வல்லாதி அறுநூறு. இக்காலத் தார் 'பாண்டுவைப்பு அறுநூறு' என்கின்றனர். அங் ஙனங் கூறுவது தவறென்பதை 'முன் எண்ப' தில்,

"தானென்ற சாத்திரங்க ளெல்லாஞ் சொன்னேன்
தனிக்குப்பிச் செந்தூரம் சட்டிவைப்பும்"

எனவும், இந்நூலில் 'குண்ட செய்து - கடைந் தெடுக்கும் வகை சொன்னேன்' எனவும் கூறி யிருப்பதா லுணர்க. பாண்டம் - சட்டி.

எண்பதில் நான்கு என்பது முன், பின் போக மற்றிரண்டும் இடைநின்ற நூல்கள் போலும். (௩)

நேரான வயித்தியநூ லநேக முண்டு
நிலைப்பதற் கறுநூறு மெண்பதும்போ லில்லை
சீரான வறுநூற்றின் முன்னூ னன்று
தெளிவான வெண்பதிலே யிந்நூ னன்று
கூரான விந்தநூல் பின்னூ லாகக்
கூறினே னிதையெடுத்து மறைத்தார் சித்தர்
பேரான தர்மத்தைக் குறித்துப் பின்னும்
பெரியோர்கள் வெளியிட்டார் பேணிப் பாரே.

கருத்து.—இச்செய்யுள், தொகை நூல்களில் இன்னின்ன நூல்கள் உயர்ந்தவைகளென்று சொல்லுகின்றது.

சொ - ள்:—நேரான - நோய்கள் நீக்கவேண்டிய முறைகள் ஒழுங்காகச் சொல்லப்பட்டு உள்ளவைகளான, அநேக வயித்தியநூல் உண்டு - பல வயித்திய நூல்கள் இருக்கின்றன, அறுநூறும் எண்பதும் போல் - அறுநூறு பாடல்கள் கொண்ட நூலையும், எண்பது பாடல்கள் கொண்ட நூலையும்போல, நிலைப்

பதற்கு இல்லை - கைகூடுவதற்குரிய செய்முறைகள் கூறப்பட்டிருக்கின்ற வேறு நூல்களில்லை, அறுநூற்றில் - இரண்டு அறுநூற்றில்; சீரான - சிறப்புப் பொருந்திய, முன்னூல் நன்று - முன் அறுநூறு உயர்ந்தது, எண்பதில் - நான்கு எண்பதுகளில், தெளிவுஆன - மிக்க தெளிவாகச் சொல்லப் பட்டதான, இநூல் நன்று - இந்தநூல் உயர்ந்தது, (ஏனெனில்) இந்தநூல் - இந்நூலை, கூரான பின்நூல் ஆகக் கூறினேன் - மருத்துவர்களுக்கு மிக்கதெளிவை உண்டாக்குவதான பின்னூலாகச் சொன்னேன், (ஆகையால்) இதைச் சித்தர் எடுத்து மறைத்தார் - இதைச் சித்தர்கள் எடுத்து மறைத்து விட்டார்கள், (அப்படி மறைக்கப்பட்ட இதை) பெரியோர்கள் - அறிவிற் பெரியோர்கள், பேரான தர்மத்தைக் குறித்து - (இதை வெளியிடுவது) பெரிய தர்மமாகுமென்று நினைத்து, பின்னும் வெளியிட்டார் - பின்னரும் வெளிப்படுத்தினார்கள், (ஆகையால்) பேணிப்பார் - மாணாக்கனே! அப்படிப்பட்ட பெருமையுள்ள இந்நூலைக் கற்று அதிலுள்ள மருந்துகளையும் விதிகளையும் அடங்கி யொடுங்கி ஆராய்ந்து பார்ப்பாயாக. (௪)

பாரப்பால் புலத்தியனே மச்ச கேந்திரா
பாடுகிறே னெண்பதிலே சுளுவை யெல்லாம்
நேரப்பா நோய்போகக் கன்ம காண்ட
நிறைப்படிக் கியார்முடிப்பா ருலகத் துள்ளே
சீரப்பா மனிதரெல்லா மிராசா வோசொல்
திரவியவா னுயிரத்தி லொருவ னேயுண்

ரேப்பா மெளியவருக் காக வேண்டி
யுயிர்கொடுக்கு மிந்நூலை யுரைசெய் வேனே.

கருத்து:—இச்செய்யுள் இந்நூல் மருந்துகளும், கர்மசாந்தியும் கூடியதாய் எளியவர்களுக்காகச் செய்யப் பட்டதென்று சொல்லுகின்றது.

சொ - ள்:—புலத்தியனே மச்சகேந்திரா - புலத்தியனே, மச்சகேந்திரனே, அப்பால் - பிறகு, சுளுவை எல்லாம் - இலேசாய் முடித்துக் கொள்ளக்கூடிய மருந்துகளையும் கர்ம சாந்தியையும், எண்பதில் பாடுகிறேன் - எண்பது செய்யுள்களுள்ள ஒரு நூலாகப் பாடுகிறேன், நேர் - தக்க மருந்துகளால் ஒழுங்காகத் தீர்க்க, அப்பா - இயலாத, நோய் - கர்ம நோய்கள்- போக - கர்ம சாந்திசெய்து உடலைவிட்டுப் போகும் வண்ணம், கன்ம காண்டம் நிறைப்படிக்கு - கர்ம காண்டம் என்னும் நூலிற்சொல்லிய அளவைப்போல், உலகத்து உள் - உலகத்தி லுள்ளவர்களில், முடிப்பார் யார் - (சாந்திசெய்து) முடிப்பவர் யாவர்? (ஒருவருமில்லை) (அவ்வாறு முடிப்பதற்கு) சீர்அப்பா - செல்வச் சிறப்பை யடையாத, மனிதர் எல்லாம் - மனிதர்களெல்லாரும், இராசாவோ - அரசனைப்போல் செய்து முடிக்கும் வன்மையுள்ளவர்களாவார்களோ? (ஆகார்), ஆயிரத்தில் ஒருவனே திரவியவான் உண்டு- ஆயிரம் பேர்களில் ஒருவனே செல்வமுள்ளவன் இருப்பான் (அவனே முடிக்குமாற்றல் உடையவனுவான்), அப்பு ஆம் ஊர்-கடலாற் சூழப்பட்ட உலகத்திலுள்ள, எளியவருக்கு ஆக - வறியவர்களும் சாந்திசெய்து

மருந்துண்பதற்காக, வேண்டி - விரும்பி, உயிர்கொடுக்கும் - உயிரை உடலில் நிலைக்கச் செய்விக்கின்ற, இநூலை - இந்தப் பின் எண்பது என்னும் நூலை, உரை செய்வேன் - சொல்லுவேன்.

பார் - முன்னிலையசை, ஓகாரம் வினா. ஏகாரங்கள் அசைகள். (௫)

---

## கன்ம சாந்தி

செய்வதென் னப்பஞ்சபா தகத்தி னாலே
 தீராத கன்மவினை சடத்திற் காணும்
உய்வதற்கு மருந்துடனே சாந்தி யுங்கொண்
 டுரைக்கிறேன் கடத்துள்ளே யோடு நீரை
மெய்வதென்ன வெடுத்துவந்து சுத்த மான
 வீடதிலே தர்ப்பையிட்டு மேலே வைத்துக்
கொய்வதென்ன வெண்ணூலிற் சங்கு பாய்ச்சிக்
 கோத்தந்தக்* குடத்தினிட வாயிற் சுற்றே.

கருத்து:—இச்செய்யுள் கர்ம சாந்திசெய்யும் வகையைக் கூறுகின்றது.

சொ - ள்:—செய்வது என்ன - இது செய்யக் கூடியதென்று எண்ணிச்செய்த, பஞ்சபாதகத்தினால் - ஐம்பெரும் பாவத்தால், தீராத - (அநுபவிக்கு நாளளவிற்றீர்வதாய்) மருந்துகளால் தீராத, கன்மவினை - கர்மங்களின் செய்கைகள், சடத்தில் காணும் - உடம்

---

(பா - ம்) *கோத்துநீர்க்.

பில் நோய்களாக உண்டாகும், உய்வதற்கு - (அவ்வகையான நோய்களினின்று நீங்கிப்) பிழைப்பதற்கு, மருந்துடன் சாந்தியும் - தக்க மருந்துகளும் கர்ம சாந்தி செய்யும் எளியவிதியும், கொண்டு - உள்ளத்தில் கொண்டு, உரைக்கிறேன் - முதலில் சாந்தியைச் சொல்லுகிறேன், (அதாவது) ஓடும் நீரை - ஆற்று நீரை, கடத்து உள்-ஒரு மட்குடத்தில், மெய்வு அது என்ன - அது (கண்டோர்) உண்மையானவிதி என்று சொல்லும்படி, எடுத்து வந்து - முகந்து கொண்டு வந்து, சுத்தம் ஆனவீட்டில் - தூய்மையான ஒருவீட்டில், தர்ப்பை இட்டு - தர்ப்பையிட்டு, மேல்வைத்து- அதின்மேல் அக்குடத்தை வைத்து, கொய்வது என்ன - அறுந்து போகாதபடி, வெள்நூலில் - வெண்மையாகிய கலச நூலில், சங்கு-சிறுகவடிகளை, பாய்ச்சிக்கோத்து-வரிசையாகக் கோத்து, அந்தக் குடத்தினிடவாயில்-அந்தக்குடத்தினுடைய கழுத்தில்,சுற்று-மாணுக்கனே நீ சுற்றுவாய். (கூ)

சுற்றியே பசுமஞ்ச ளரைத்தங் கப்பித்
துளிரான மாங்குழையு மேலே வைத்துப்
பத்தியாய்த் தூபமொடு தீபங் காட்டிப்
பகலவனுண் முதலேழு நாளு மாங்கே
மத்தியா னந்தனிலே கன்ம ரோக
மன்னவனை முன்னாக வைத்துக் கொண்டு
புத்தியாய்க் கடசலத்தின் முக்கோண மிட்டுப்
போதிப்பாய்க் கோணத்துட் சிவ்விட்* டோதே.

(பா - ம்.) *சிகாரமிட்.

*கருத்து:*—இச்செய்யுள் கர்மசாந்தி செய்யும்விதி சொல்லுகின்றது.

சொ - ள்:—சுற்றி-அவ்வாறு சுற்றி, பசுமஞ்சள் அரைத்து அப்பி-பசுமஞ்சளரைத்து அக்குடத்திற்குப் பூசி, மேலே-அக்குடத்தின் வாயில், துளிர் ஆன மாகுழை வைத்து-துளிர்க்கின்ற மாவிலைகள்செருகி, பத்தியாய் - அன்புடனே, தூபமொடு தீபம் காட்டி-சாம்பிராணிப்புகையும் கர்ப்பூரமுங்காட்டி, பகலவன் நாள்முதல் - சூரியன் நாளாகிய ஞாயிற்றுக்கிழமை முதல், ஏழுநாளும் - ஏழுநாள்களாகிய சனிக்கிழமை வரைக்கும், மத்தியானத்தில்-நண்பகலில், ஆங்கு-அக்குடம் வைத்திருக்குமிடத்தில், கன்மரோகம் மன் அவனை-கர்மநோய் நீடித்திருக்கின்ற அந்நோயாளியை, முன் ஆக வைத்துக்கொண்டு-எதிரில் உட்காரவைத்துக்கொண்டு, புத்தியாய்-நூலாய்ந்ததனு லுண்டாகும் அறிவுடன், கடம்சலத்தில் - அக்குடத்திலுள்ள நீரில், மு கோணம் இட்டு-முக்கோண யந்திரத்தைப் பாவனையாகப் போட்டு, கோணத்துள் - மூன்று கோணங்களின் உள்ளிடங்களில், போதிப்பாய் - நல்லுணர்வுடன், சி இட்டு-சிகாரம் போட்டு, ஓது - பின்சொல்லப்படும் மூலமந்திரத்தை உச்சரிப்பாய்.

ஏ, தன் உம் அசையும், சாரியையுமாம். (எ)

ஓதுவாய் கூவிளத்தின் பத்ரநூற் றெட்டும்
ஓங்கார முச்சரித்துக் குடத்திற் போடு

நீதியாய் முடிந்தபின் பாத்திரத்தி னாலே
நீரெடுத்துப் புரோட்சிப்பாய் கடத்தி னீரிற்
பேதியா தொருசிரங்கை பத்திர மூன்று
பிணியாளன் தனக்களிக்கப் பிரமை போகும்
சேதியே தருக்கன்முத லேழு நாளுந்
தினமிந்தப் படியெடுத்துச் செய்ய னன்றே.

கருத்து.—இச்செய்யுள் கர்ம சாந்தி செய்யும் விதியின் தொடர்ச்சி சொல்லுகின்றது.

சொ - ள்:—கூவிளத்தின் பத்ரம் நூற்றெட்டும் - நூற்றெட்டு வில்வ இலை கொண்டுவந்து, ஓங்காரம் உச்சரித்து ஓதுவாய் - பிரணவ மந்திரஞ் சொல்லிச் சொல்லி, குடத்தில் போடு - (ஒவ்வொன்றாக) அக் குடத்திற் போடுவாய், நீதியாய் - ஒழுங்காக, முடிந்த பின் - அத்தியானம் முடிந்த பிறகு. பாத்திரத்தி னால் நீர்கடத்து எடுத்து - தாம்பிரக் கரண்டியினால் அக் குடத்தி லுள்ள நீரை அதிலிருந்து எடுத்து, புரோட்சிப்பாய் - அவன் மீது தெளித்து, (பிறகு) பேதியாது - யாதொரு மாறுதலுமில்லாமல், கடத்து நீரில் - கடத்திலுள்ள நீரில், ஒரு சிரங்கை - ஒரு உள்ளங்கை நீரும், மூன்று பத்திரம் - மூன்று வில்வ பத்திரமும், பிணியாளன் தனக்கு அளிக்க - நோயாளிக்குக் கொடுத்துக் குடிக்கவும் உண்ணவுஞ் செய்தால், பிரமை போகும் - அவன் செய்த கர்மத்தின் பிரமை நீங்கிப் போய்விடும், அருக்கன் முதல் ஏழு நாளும் - (ஆகையால்) ஞாயிற்றுக்கிழமை முதல் ஏழு நாள்களிலும், தினம் - ஒவ்வொரு நாளும், இந்தப்படி எடுத்

துச் செய்யல் நன்று - இவ்விதமாகத் தினமும் புது நீரும் வில்வ பத்திரமும் எடுத்துச் சொன்னபடி செய்தல் நல்லதாம், ஏது சேதி - இதை விட்டுக் கர்ம சாந்திக்கு வேறு செய்திக ளில்லை. (அ)

நன்றான நாளேழுஞ் செய்தா யானால்
நாடாது கன்மவினை நாட்டி லுந்தா
னொன்றான மூலமிது வெளிவி டாதே
ஓமந்தர்ப் பணஞ்செபங்க ளிதற்கி டல்ல
நன்றாகக் கன்மத்தை நிவர்த்தி செய்து
நலமான வவுடதத்தைத் தானே கொள்வாய்
குன்றாத மேகமவை யிருபத் தொன்றும்
குடிபோக மருந்தொன்று கூறு வேனே.

கருத்து:—இச்செய்யுள் கர்மசாந்தியின் சிறப்பையும் பிறகு மருந்து கொள்ளவேண்டு மென்பதையும் அக்கர்ம நோய்களிலொன்றான நீரிழிவுக்கு மருந்து கூறுகிறேன் என்பதையுங் கூறுகின்றது.

சொ - ள்:—நன்று ஆன - (கர்மசாந்தி செய்வதால் நோயாளிக்கு) நன்மை யுடையவையான, நாள் ஏழும் - ஏழு நாள்களும், செய்தாயானால் - அச்சாந்தி செய்தாயாயின், கன்மவினை - அம்மறத்தின் செயல், நாட்டிலும் நாடாது - அந்நோயாளியை விட்டுப்போவதுடன் நில்லாமல் அந்நாட்டிலும் சேராது; இது ஒன்று ஆனமூலம்-இது ஒப்பற்ற கர்மசாந்தியாகும், இதுவெளிவிடாதே-இதைவெளியில் விடவேண்டாம், இதற்கு - இந்தச் சாந்திக்கு, ஓமம் தர்ப்பணம் செபங்

கள் - ஓமஞ் செய்தலும் தர்ப்பணஞ் செய்தலும் ஜபம் செய்தலும், ஈடல்ல - ஒப்பல்ல, கன்மத்தை நன்றாக நிவர்த்திசெய்து - (இவ்வாறு) நன்றாகச் சாந்திசெய்து கர்மத்தை ஒழித்து, நலம்ஆன - (அந்நோய்களை நீக்கி உடம்புக்கு) நன்மையைக் கொடுப்பதான, அவு டதத்தை கொள்வாய் - மருந்தை (விதியுடன்) உட் கொள்வாய், (அந்நோய்களில்) குன்றாத - விரைவில் தீராத, மேகம்வகை இருபத்தொன்றும் குடிபோக - இருபத்தொருவகையான நீரிழிவு நோயானது இடம் விட்டுப்போக, ஒன்று மருந்து கூறுவேன் - ஒரு மருந் தைச் சொல்லுகிறேன்.

கர்மசாந்தி செய்து மருந்துண்ண வேண்டு மென்பதை,

"கருமநோ யிவையெலாங் கண்ணுத லளித்தருள்
கருமகாண் டக்கடன் கண்டவ் வவற்றை
யொழித்துயர் மருந்துணி னும்பரைப் போலச்
செழித்துநாற் பொருளுஞ் சேரவாழ் குவரே"

என்று தேரர் கூறியுள்ளதா லறிக.

இங்ஙனந் தேரர் 'கரும நோயிவை யெலாம்' எனப் பொதுவாகக் கூறினும்,

"சுயவாயு குட்டுகயங் குன்மநீ ரிழிவும்
சூதகத்துக் கிராணிநீ ரடைபாண்டு மூலம்
கயல்வாயு கட்குந்தம் கடின சுவாசம்
காண்பாய்முன் செய்தவுயிர்க் கன்மவினை தானே"

என அகத்தியர் சிறப்பாகக் கூறினமையு முணர்க. (கூ)

மேகநீரிழிவு இருபத்தொன்றுக்கு

## சொர்ணப்பிரக செந்தூரம்

கூறுவே னப்ரகசெந் தூர மைந்து
கொடுமையிலாப்* பவழபற்ப மெடையே கூட்டு
நீறுமோர் பறிரேக்கப் ரகத்திற் பாதி
நிசமுள்ள ரசப்பதங்கம் பவழ நேராம்
சீருமே வயக்காந்த செந்தூ ரந்தான்
சிறப்பான வப்ரகந் தனக்கு நேராம்
தாருமே கருவங்கம் ரேக்கிற் பாதி
சாதகமாய்க் குமரிப்பால் விட்டங் காட்டே.

கருத்து:—இச் செய்யுள் சொர்ணப்பிரக செந்தூரஞ் செய்யும் முறை கூறுகின்றது.

சொ - ள்:—கூறுவேன் - நான் சொல்வதாகிய, அப்ரக செந்தூரம் ஐந்து - நன்முய் முடிக்கப்பட்ட அப்ரக செந்தூரம் ஐந்தெடை, (அதாவது ஐந்து வராகனெடை) கொடுமை யிலா - உடம்புக்கு எவ்வகையாலும் தீங்கு விளைவிக்காத, பவழ பற்பம் - பவழ பற்பம், எடையே கூட்டு - அந்த ஐந்து வராகனெடையே சேர், நீறும் - நீறுந் தன்மையுள்ள, ஓர் - உயர்ந்த, பறிரேக்கு - தங்க ரேக்கு (குந்தனத்தகடு), அப்ரகத்தில் பாதி - அப்பிரக செந்தூர எடையான ஐந்து வராக னெடையில் பாதியான இரண்டரை வராக னெடையாம், நிசம் உள்ள - உண்மையாய்

(பா - ம்.) *கொடிதான.

முடித்த, ரசப் பதங்கம் - ரசப் பதங்கமானது, பவழம் நேராம் - பவழ பற்ப எடையான ஐந்து வராகனெடையாம், சீர் மேவு - சிறப்பைப் பெற்றுள்ள, அயகாந்த செந்தூரம் - அயக்காந்த செந்தூரமானது, சிறப்பு ஆன அப்ரகம் தனக்கு நேர் ஆம் - உயர்ந்த அப்ரக செந்தூரத்தின் எடையான ஐந்து வராகனெடையாம், கருவங்கம்-கருவங்க செந்தூரமானது, ரேக்கில் பாதி தாரும் - தங்கத் தகட்டெடையாகிய இரண்டரை வராக னெடையிற் பாதியான ஒன்றே கால் வராகனெடையாம், சாதகமாய் - (இவைகளை யெல்லாம் ஒன்றாய்ச் சேர்த்துக் கல்வத்திட்டு) கைப் பழக்கமாய், அங்கு - அவ்விடத்தில், குமரிப் பால் விட்டு ஆட்டு-கற்றாழஞ் சாறு விட்டு அரைப்பாயாக.

உ சாரியை. (ய)

ஆட்டியே வில்லை தட்டிப் புடத்தி னிற்போ
டாறினெடு* வட்டுருக்குப் போலாய் நிற்கும்
நீட்டியே வில்லைக்குப் பாதி கந்தி
நேராகக் கந்திக்குப் பாதி லிங்கம்
மாட்டியே கல்வத்திற் குமரிச் சாற்றால்
மாளுமட்டுந் தானரைத்து வழித்து வில்லை
கூட்டியே யிரவிதனி லுலர்ந்த பின்பு
குகையிலிட்டுச் சீலைசெய்து புடத்தைப் போடே.

கருத்து:—இச்செய்யுள் முன் பாட்டிற் கூறப் பட்ட செந்தூரத்தின் தொடர்ச்சியையே கூறுகின் றது.

---

(பா - ம்.) *அப்பனே.

சொ - ள்:—ஆட்டி - நன்று யரைத்து, வில்லை தட்டி - பில்லையாகத் தட்டி, (வெயிலில் உலர்த்தி நன்று யுலர்ந்த பின் ஒரு அகலிலிட்டு மேலகல் மூடி மண்சீலை மூன்றுவது ஐந்தாவது செய்து மீண்டும் உலர்த்தி) புடத்தினில் போடு-புடம்போடு, ஆறின் - அப்புடம் நன்று யாறின பிறகு, எடு-அப்புடத்தைப் பிரித்து அகலை எடுத்துப் பிரித்து உள்ளிருக்கும் மருந்தை எடு, (அது) உருக்கு வட்டுபோல் ஆய் நிற்கும் - எழுகு பில்லையைப்போ லாயிருக்கும், நீட்டி - அப்பில்லையை அளந்து, (எடை தூக்கி) வில்லைக்கு - அப்பில்லை இருக்கும் எடைக்கு, கந்திபாதி-பாதி எடை தூய்மைசெய்த கந்தகமும்,கந்திக்குப்பாதி லிங்கம்-கந்தக எடைக்குப் பாதி தூய இலிங்கமும் ஆகிய இவைகளை, நேராக - எடையில் ஏற்றக் குறைச்சல் இல்லாதபடி, கல்வத்தில் மாட்டி - கல்வத்தில் பில்லையுடன் சேர்த்து, மாளும் மட்டும் - நன்றாய் மையும் வரையில், குமரிச் சாற்றால் அரைத்து - கற்றாழஞ் சாற்றினா லரைத்து, வழித்து - அரைத்த மருந்தை வழித்து, வில்லை கூட்டி - பில்லியாகத் தட்டி, (அகலிலிட்டு) இரவிதனில் உலர்ந்த பின்பு - அப்பில்லை வெயிலில் நன்றுயுலர்ந்த பின்னர், குகையில் இட்டு - அகலிலிட்டு மேலுமகல் மூடி, சீலை செய்து - முற்படி மண்சீலை செய்து உலர்த்தி, புடத்தைப் போடு - மறுபடியும் புடம் போடுவாய்.

ஏகாரங்கள் அசைகள். நீட்டுதல் என்னும் அளவு சண்டு எடுத்தலுக்காயிற்று.

அன்றி, நீட்டி என்றதற்குச் சேர்த்து எனவும், மாட்டி என்பதற்கு நன்றாய் எனவும் பொருள் படுத்தலுமாம். தான் சாரியை. (கக)

புடம்போட வேழுதரஞ் சிவந்து காணும்
பொல்லாத மேகமெல்லாங் கடலோ டிப்போம்
திடம்பாரு வன்னமது குறைந்தி ருந்தால்
செயலிங்க மரைக்கழஞ்சு சேர்த்துப் போடு
விடம்போல வந்தநோய் மேகந் தீர்ந்து
விட்டோடிப் போகுமஃ தனுபா னங்கேள்
உடம்பறிந் தமிர்தசஞ் சீவி லேகிய
முசிதமா* மனுபான முரைத்திட் டேனே.

கருத்து:—இச்செய்யுள் மேற்படி செந்தூரத்தால் தீரும் நோயையும், அதற்கு நிறமேற்றும் வழியையும், அநுபான மென்னும் துணை மருந்தையும் சொல்லுகின்றது.

சொ - ள்.—ஏழுதரம் புடம்போட - இவ்வாறு இன்னும் ஏழுபுடம் போட்டால், சிவந்து காணும் - செந்தூரமாகும், (இச்செந்தூரத்தால்) பொல்லாத மேகம் எல்லாம்-கொடிய நீர் மேகநோய்களெல்லாம், கடல் ஓடிப்போம் - கடலில் ஓடிவிழும், (இல்லையாய் விடும்) திடம்பார் - செந்தூரத்தின் நிறம் முதலிய வன்மையைப்பார், வன்னம் அது குறைந்திருந்தால் - நிறமானது இருக்கவேண்டிய செம்மைக்குக் குறைந்திருந்தால், செயலிங்கம் அரை கழஞ்சு சேர்த்துப்

(பா - ம்.) *உண்ணவே



போடு - நெருப்பை வென்ற இலிங்கம் அரைக்கழஞ் சென்னும் அரையே அரைக்கால் வராகனெடை அச் சொர்ணுப்ரக செந்தூரத்துடன் சேர்த்து அரைத்துப் புட்டியில் (குப்பி) வைத்துக் கொள்வாய், (பின்னர் கொடுக்க வேண்டிய அளவின்படி கொடுத்தால்,) விடம்போல வந்த மேகநோய் தீர்ந்து-நஞ்சைப்போல் உடல் முழுதும் பரவிவந்த நீர்மேகந் தீர்ந்து, விட்டு ஓடிப்போகும் - உடலைவிட்டு ஓடிப்போய்விடும், அஃது அனுபானம் - அந்நோய்க்கும் அம்மருந்துக் கும் துணை மருந்தானது, உடம்பு அறிந்து- (சேர்க்க வேண்டிய அளவு வன்மை முதலியவைகளைக் காண் பதற்காக) வாதவுடம்பு பித்தவுடம்பு ஐயவுடம்பு கலப்புடம்பு என்னும் நால்வகை உடம்புகளில் எது வென்று அததற்குச் சொல்லப் பட்டிருக்கிற குணங் களாலாராய்ந் தறிந்து, (எவ்வகை உடம்பாயிருந்தா லும்) அமிர்த சஞ்சீவி லேகியம்-இப்பேருள்ள லேகிய மானது, உசிதம் ஆம் அனுபானம் - உயர்ந்த அனு பானமென்று, உரைத்திட்டேன் - நான் சொல்லி விட்டேன், கேள் - மாணுக்கனே! நீ நன்முய்க் கேட் டுணர்ந்து கொள்வாய்.

உகரம் சாரியை, ஏகாரம் அசை.

அம்ருத சஞ்சீவி எனற்பாலது அமிர்த சஞ்சீவி என்முயிற்று. இவ்விரண்டு சொற்கள் வடமொழிகள், அமிர்தமாகிய சஞ்சீவி என்று பொருள். அ + ம் ருத்யு - ம்ருத்யுவை இல்லையாகச் செய்வதென்னும் பொருட்டு. ம்ருத்யு - சாதல், அமிர்தம் ; எனினும்,

சஞ்சீவி எனினும் சீந்தில் எனினும் ஒரு பொருளாம். சீந்தில் சத்து லேகியமாயினும், சீந்தில் சர்க்கரை லேகியமாயினும் "அமுதாதி லேகியம்" என்றும், "சஞ்சீவி லேகியம்" என்றும் "அமுத சஞ்சீவி லேகியம்" என்றும் கூறுவர் ஆயுணூல் வல்லோர்.

ஆயுள் நூல் என்பது உடம்பைக் காத்தற் பொருட்டாக்கின தமிழ் மருந்து நூல்.

ஆயுள் என்னுஞ் சொல்லானது ஆ+உள் எனப் பிரிக்கப்பட்டு ஆ என்னும் பசுவாகிய உயிரிருந்து வாழும், உள் என்னும் வீடாகிய உடம்பு என்னும் பொருளவாய், நூல் என்னும் சொல்லுடன் சேர்ந்து அதைக் காக்கும் மருந்துகளைச் சொல்லுகின்ற நூல் என்றமைந்த தென்க.

உள் வீடு என்றதை;

"அகமனை மனையே பாவம்
அகலிட முள்ளு மாமே"

என்னும் நிகண்டாலறிக.

ஆ+உள் - ஆயுள் என்றானது, கோ+இல் - கோயில் என்றானது போலக்கொள்க. (கஉ)

---

# சொர்ணப்பிரக செந்தூரம்

## செய் முறை.

1. அப்பிரக செந்தூரம் பலம் ½, (இந்நூலிற் பின் சொல்லப்படும்) 2. பவழ பற்பம் பலம் ½,

3. குந்தனைத் தங்கத் தகடு பலம் $\frac{1}{4}$, (இந்நூலிற் பின் சொல்லப்படும்) 4. ரசப் பதங்கம் பலம் $\frac{1}{2}$, (நல்வழியாய் முடிக்கப்பட்ட) 5. அயக்காந்த செந்தூரம் பலம் $\frac{1}{2}$, 6. கருவங்கசெந்தூரம் பலம் $\frac{1}{8}$. இவ்வாறும் சேர்ந்த தொகையான ($2\frac{3}{8}$) இரண்டேகாலே அரைக்கால் பலத்தையும் உயர்ந்த கல்லிலிட்டுக் கற்றாழைச் சாற்றால் நன்றாய்த் தங்கத்தின் மின்னல் மறைகிற வரைக்கும் அரைத்துப் பில்லைதட்டி வெயிலிலுலர்த்தி அகலிலிட்டு, மேலகல்மூடி மண் சீலை ஒவ்வொன்றாய்ச் செய்துலர்த்தி மூன்று செய்து நன்றாயுலர்த்தி 20-வரட்டியில் புடம் போட்டு ஆறவிட்டு எடுத்துப் பார்த்தால் எழுகுபில்லையைப்போலிருக்கும். அந்தப் பில்லையை நிறுத்து அப்பில்லை எடைக்கு அரை எடை சுத்தி செய்த கந்தகமும், அந்தக் கந்தக எடைக்கு அரை எடை சுத்தி செய்த லிங்கமும் அப்பில்லையுடன் சேர்த்துக் கல்வத்திலிட்டுக் கற்றாழைச் சாற்றால் நன்றாய் மையும் வரைக்கும் அரைத்துப் பில்லை தட்டி வெயிலிலுலர்த்தி அகலிலிட்டு மேலகல் மூடி மண் சீலை முன்படி செய்து உலர்த்தி இருபது வரட்டியில் புடம்போட வேண்டும். இப்படியே இன்னும் ஏழு புடம் தீர்த்தால் ஏற்படும் ஒன்பது புடத்தில் செந்தூரமாய்விடும். அதன் நிறம் குறைந்திருந்தால் நெருப்புக்கு நின்ற லிங்கத்தையாவது, நன்றாய்ச் சுத்தி செய்த லிங்கத்தையாவது அச் செந்தூரத்துடன் சேர்த்து நன்றாய் அரைத்து வைத்துக் கொண்டு, சீந்திலாதி லேகிய அனுபானத்தில் நோய்

வன்மைக்குத்தக்க அளவில் செந்தூரஞ் சேர்த்து நோய் வன்மை, மென்மைகளுக்குத் தக்க நாளளவு கொடுக்க வேண்டும்.

சுத்தி செய்த கருவங்கத் தூளாகவும் சிலர் சேர்க்கிறார்கள்.

பத்தியம் முதலியவை வழக்கத்தில் சொல்லிக் கொள்ள வேண்டும். பலத்துக்குப் பதில் வராகனெடையும் சேர்க்கலாம். இவ்வாறு இரண்டு மருந்து முறைகளும் எழுதப்பட்டிருக்கின்றன. (கரு)

---

## தாம்பிர பற்பம்.

உரைத்தசொர் ணப்பிரக மென்றே பேராம்
ஒடுங்காத சூலைகுன் மம் வாயுவுக் கெல்லாம்
கரைக்கிறேன் தாம்பிரத்தைச் சுத்தி செய்து
கனமான குகையிலிட் டுருக்கும் போதே
இரைக்குறாஉந் தாளகமு மண்டத் தோடும்.
எலுமிச்சம் பழச்சாறு விட்ட ரைத்துக்
குரைக்கிறேன் குன்றிமணி போலு ருட்டிக்
குறையாம லொருபலமுப் பலத்திற் றுக்கே.

கருத்து:—இச்செய்யுள் முன்சொன்ன மருந்தின் பேர் இன்னதென்பதையும், தாம்பிர பற்பம் செய்யும் வழியையுங் கூறுகின்றது.

சொ - ள்.—சொர்ன அப்பிரக மென்று உரைத்த பேராம்-முன் சொன்ன மருந்துக்கு சொர்ணப்பிரக செந்தூரம் என்று சொல்லப்பட்ட பேரா

கும், ஒடுங்காத - சிற்சில மருந்துகளுக் கடங்காத, சூலை குன்மம் வாயுவுக் கெல்லாம் கரைக்கிறேன்- சூலை குன்மம் வாயு இவைகளெல்லாம் நீங்கிப்போவ தற்கு(தாம்பிர பற்பம்)சொல்லுகிறேன், தாம்பிரத்தை சுத்தி செய்து - தாம்பிரத்தை முறைப்படி சுத்தி செய்து, கனமான குகையில் இட்டு - உயர்ந்த மூசையிலிட்டு, உருக்கும்போது - அதை உருக்கும் போது, இரைக்கு உறும் - இரைப்பிருமலுக்கு ஏற்ற, தாளகமும் அண்டத்து ஒடும்-தாளகத்தையும் கோழி முட்டை ஓட்டையும் சரி எடையாக எடுத்து (இரண் டையும், எலுமிச்சம் பழச்சாறுவிட்டு அரைத்து-எலு மிச்சம் பழச்சாற்றால் நன்றாய்த்தாளகத்தின் மின்னல் மறையும் வரைக்கும் அரைத்து, குரைக்கிறேன்-நான் கூச்சலிட்டு வற்புறுத்திச்சொல்லுகின்ற, குன்றி மணி போல் உருட்டி-குன்றி மணியின் அளவாக உரு ண்டைகள் செய்து, மு பலத்தில் - (அப்படி உருக்கு கின்ற) மூன்று பலம் செம்பில், ஒரு பலம் - (இவ் வுருண்டை) ஒரு பல எடைக்கு, குறையாமல்- (கொஞ்சமும்) குறையாதபடி, தாக்கு - அம் மூசை யில் போட்டுக் கொண்டு வருவாய்.

ஏகாரங்கள் மூன்றும் அசைகள். கரைக்கிறேன் என்பதில் ககரம் விரித்தல். (கச)

தாக்கியே யொவ்வொன்றாய்க் கொடுக்க வாங்கித்
தாம்பிரமும் வெண்கலம்போற் றகர்ந்து காணும்
நீக்கியே பொடியாக்கி யரைக்கும் போது
நீட்டுவாய் பூநீறு வீரமிரு கழஞ்சு

தூக்கியே சேர்த்தரைப்பா யெருக்கின் பாலாற்
றுடியடங்க மூன்றுநாள் சுழல வாட்டிப்
பூக்கவே வில்லைதட்டி யுலர்ந்த பின்னர்ப்
புடம்போடு நூறெருவிற் பொருமி நீறும்.

கருத்து—இச்செய்யுளும் தாம்பிர பற்பம் செய்யும் முறையின் தொடர்ச்சி கூறுகின்றது.

சொ - ள்:—ஒவ்வொன்றாய்த் தாக்கிக்கொடுக்க - ஒவ்வொரு உருண்டையாய் அம்மூசையிலுள்ள தாம்பிரத்திற் பொருத்திக் கொடுத்தால், தாம்பிரமும் வாங்கி - உருகிக் கொண்டிருக்குந் தாம்பிரமும் அவைகளை இழுத்துக்கொண்டு, வெண்கலம்போல் தகர்ந்து காணும் - (தான்) வெண்கலம் போன்ற நிறமுள்ளதாய் நொறுங்கித் தோன்றும், நீக்கி - (அப்பொழுது) மூசையை வெளியிலெடுத்து அம்மூசையிலுள்ள தாம்பிரத்தை எடுத்து, (கல்வத்திலிட்டு) பொடி ஆக்கி அரைக்கும்போது - தூள் பண்ணி நன்றாய்க் கலக்க அரைக்குங் காலத்தில், நீட்டுவாய் பூ நீறு - நன்றாய் உயர்ந்து நீண்டு கனத்த பூ நீறும், வீரம் - வீரமும், இருகழஞ்சு தூக்கிச் சேர்த்து - வகைக்கு இரண்டு கழஞ்சு என்னும் கால் பலம் நிறுத்து அத்தாம்பிரத்துடன் சேர்த்து, எருக்கின் பாலால் மூன்று நாள் துடி அடங்க சுழல ஆட்டி அரைப்பாய் - எருக்கின் பாலால் மூன்று நாள் வரைக்கும் அம் மருந்துகளின் வடிவம் வெளியில் தோன்றாதபடி அரைப்பாய், (பிறகு) வில்லை தட்டி - (வழித்துப்) பில்லையாகத் தட்டி, பூக்க உலர்ந்த பின்னர் - வெளுக்கும்படி

உலர்ந்த பின்பு, (ஒரு அகலிலிட்டு மேலகல் மூடி நாளொன்றுக்கு ஒரு மண் சீலையாக உலர்த்தி உலர்த்தி மூன்று மண்சீலை செய்து உலர்த்தி.) நூறு எருவில் புடம்போடு - நூறு எருமுட்டையிற் புடம் போடுவாய், பொருமி நீறு ஆம் - மலர்ந்து திருநீறு போன்றதாகும் (பற்பமாம்). (கரு)

ஏகாரம் நான்கும் அசைகள்.

நீறான தாம்பிரத்தைக் கல்வத் திட்டு
நேரிழையார் முலைப்பாலா லரைப்பாய் சாமம்
கூறான ரசங்கழஞ்சு கூட்டி யாட்டிக்
குக்குடத்திற் புடம்போடு கொடிய பற்பம்
தீராத நோயுண்டோ குன்ம மெட்டில்
சேர்ந்தபல ரோகமெல்லாந் தீர்ந்து போகும்
பாரான கன்னற்சா றிஞ்சி வாழைப்
பழத்திலிடு பத்தியம்பாற் கஞ்சி யாமே.

கருத்து:—இச்செய்யுளும் தாம்பிர பற்பம் செய்யும் முறையின் தொடர்ச்சி கூறுகின்றது.

சொ - ள்.—நீறு ஆன தாம்பிரத்தை - அவ்வாறு வெள்ளையான தாம்பிர பற்பத்தை, கல்வத்து இட்டு - கல்வத்திற் போட்டு, (அத்துடன்) கூறு ஆன - (ஏழுவகை அல்லது எண் வகையான சுத்தி செய்யப் பட்டு) நற்கூறான, ரசம் கழஞ்சு கூட்டி - ரசம் ஒன்றே கால்வராகனெடை சேர்த்து, நேர் இழையார் முலைப் பாலால் சாமம் ஆட்டி அரைப்பாய் - கைக் குழந்தைகளையுடைய பெண்கள் இளமுலைப் பாலினால்

ஒரு சாமம் என்னும் தற்கால மூன்று மணி நேரம் வரைக்கும் நன்குயாட்டியரைத்து, (வழித்துப் பில்லை தட்டி உலர்த்தி அகலிலிட்டு மேலகல் மூடி மூன்று மண் சீலை செய்து உலர்த்தி) குக்குடத்தில் புடம் போடு கொடிய பற்பம்-இயற்கையான எருமுட்டை பத்தில் புடம் போடுவாய் பிறகு அது உயர்ந்த பற் பமாயிருக்கும், (இப்பற்பத்தை நோய் மென்மை, வன்மைகளுக்கும், உடல் மென்மை, வன்மைகளுக் கும் ஏற்றவாறு வழக்க அளவுபடி) பார் ஆன - உல கத்தாருக்கு ஏற்றதான, கன்னல் சாறு இஞ்சிச் சாறு வாழைப் பழத்தில் இடு - கரும்புச் சாற்றிலும் இஞ் சிச் சாற்றிலும் வாழைப் பழத்திலும் கொடு, பால் கஞ்சி பத்தியம் ஆம் - பாற்கஞ்சி பத்தியமாமென்று சொல்லிவை, (இப்படி செய்தால்) குன்மம் எட்டில் தீராத நோய் உண்டோ-எட்டுவகைக் குன்மங்களில் தீராத குன்ம நோயிருக்குமா ? இராது; சேர்ந்த பல ரோகம் எல்லாம் தீர்ந்து போகும் - அவ்வெட்டு வகைக் குன்ம நோய்களிற் சேர்ந்த பல நோய்க ளெல்லாமுந் தீர்ந்து போய்விடும்.

ஏகாரம் ஈற்றசை.

குக்குட புடம் பத்து வரட்டி என்றதை;

"காடியே புடத்திட்ட மாமா கேளாய்
காட்டெருவி லொன்றுபுடங் காடை யாகும்
பாடியே மூன்றெருகௌ தாரிப் புடமாம்
பத்தெருத்தான் குக்குடமாம் பரிந்து கேளாய்

நாடியே யைம்பதொரு வேன மாகும்
 நல்லறூ றெருகசத்தின் புடம தாமே."

என்பதாலுணரக் கடவர். (கரு)

## அரையாப்புக்குப் பாடாணக்கட்டு

ஆகுமே யுப்புடனே மிளகு சீரம்
 ஆமணக்கு நெய்யோடு நெய்யு மாகும்
போகுமே யிம்மருந்து முப்பத் தாறிற்
 பூட்டினே னிதுபோலச் சுளுவி ராது
வேகுமே லரையாப்புத் தீர வென்றால்
 வெள்ளைப்பா டாணமதை மெழுகி லூட்டி
ஏகமே வில்லைதட்டி வெதுப்பிக் கட்ட
 விருந்தவிடந் தெரியாம லேகும் பாரே.

கருத்து:—இச்செய்யுள் தாம்பிர பற்பத்திற்குப் பத்தியமும், வேறு நூலில் இப்பற்பம் கூறியிருப்பதையும், அரையாப்பு நோய்க்குக் கட்டுமருந்தையும் சொல்லுகின்றது.

சொ - ள்.—உப்புடன் மிளகு சீரம் ஆமணக்கு நெய் ஒடு நெய்யும் ஆகும் ஆகும் - தாம்பிர பற்பம் தின்னுங் காலத்தில் உப்பு, மிளகு, சீரகம், முத்துக் கொட்டை நெய், பசுநெய் இவைகள் பத்தியத்துக்கு மிக்காவனவாம், போகும்-மற்றவை நீக்க வேண்டியவைகளாம், இ மருந்து முப்பத்தாறிற் பூட்டினேன்- இதுபோன்ற தாம்பிர பற்பம் ஒன்று முப்பத்தாறு பாடலுள்ள ஒரு நூலில் சொல்லியிருக்கிறேன், இது

போல சுளுவு இராது - அது இதைப்போல் எளி தாய்ச் செய்ய முடியாது, மேல் - இதன்மேல், வேகும் அரையாப்பு - நோய் வெப்பமுள்ள அரை யாப்பானது, தீர என்றால்-தீரவேண்டுமானால், வெள் ளைப் பாடாணம் அது மெழுகில் ஏகமே ஊட்டி - வெள்ளைப் பாடாணத்தைப் பொடித்து அவ்வெடை எடுத்த மெழுகுடன் ஒன்றாய்ச் சேர்த்து உருக்கி (அரையாப்புக் கட்டி இருக்கும் அளவு) வில்லைதட்டி வெதுப்பிக் கட்ட - பில்லையாகச் செய்து சூடுகாட்டி (அக் கட்டிமேல் வைத்து) கட்டினால், இருந்த இடம் தெரியாமல் ஏகும் - அவ் வரையாப்புக் கட்டியானது இருந்த அடையாளந் தெரியாதபடி மறைந்து போய் விடும், பார் - மாணாக்கனாகிய நீ செய்து பார்.

முப்பத்தாறிற் சொன்ன தாம்பிர பற்பம்:

பாரப்பா செம்பினிட வெள்ளை கேளு
பரிவான தாம்பிரத்தைக் குகையில் வைத்துச்
சேரப்பா மதியுப்பு பலமே போடு
சேர்ந்துருகும் போதினிலே மருந்து கேளு
காரப்பா வண்டமது பலந்தா னிரண்டு
கனத்தநவாச் சாரமதி லிரண்டு போடு
சீரப்பா கல்வத்திற் றாள தாக்கிச்
சிறந்தபொடி மேற்கார மரைதான் போடே.

போட்டதனைப் பொடித்துநன்று யதனைத் தூவு
புகழான செம்பினிட வூறல் போகும்

தாட்டிகமாய்ப் பின்பெடுத்து வங்கங் கூட்டித்
தனியோட்டி லூதிடவே களிம்பு போகும்
மாட்டதனைக் குகையிலொரு பலம்போட் டப்பா
வளமாகக் கண்விட்டே யுருகும் போது
நாட்டியதோர் சுண்ணத்திற் றுளகத்தை வைத்து
நலமாகப் பதினைந்து தரமே நீற்றே.

நீற்றினபின் வாங்கியதை யெடுத்துக் கொண்டு
நிறுத்திடுவாய் பலமொன்று சாரங் கால்தான்
போற்றியிவை பழச்சாற்று லரைத்துக் கொண்டு
புகழாகப் பயறளவி லுண்டை செய்து
நேர்த்தியாய்க் கொடுக்கையிலே சத்தை வாங்கும்
நேரான செம்பதுதான் வெண்கலம் போலாகும்
மாற்றியதை யரைப் பலந்தான் கல்வத்திட்டு
மாட்டியிதைப் பொடித் திடுவாய் தூளாய்க்காணே.

காணப்பாலந் தெடைக்கு வீரம் போட்டுக்
கடுகவே சாமமொன் றரைத்தா யானால்
தோணப்பாசல முண்டா மெழுகு போலாம்
துடியான சூதமரைப் பலமே போடு
ஊணப்பா செம்பெடைக்குச் சூடன் போடா
யுரைக்கும்போ திதில்வெள்ளை யரைக்கால்* போடு
நீணப்பா சூடனெடை யுரமும் போடு
நிலைக்கவே யரைத்து நன்றாய் வில்லைதட்டே.

வில்லைதனை யுலர்த்தியபின் குகைக்குள் வைத்து
மேல்மூடிச் சீலை செய்து புடத்தைப்போடு

---

(பா - ம்.) *வெள்ளைதனைக் காசெடைதான்

வில்லையது கஜபுடத்தில் வெள்ளை யாகும்
விளங்கியதோர் தாம்பிரத்தின் வெள்ளை யப்பா
வில்லையதைப் பதனமதாய் வைத்துக் கொண்டால்
மேகமொடு பதினெட்டுக் குட்டந் தீரும்
வில்லையினால் வாயுவெல்லா மொழிந்து போகும்
விளங்கியதோர் பித்தமெல்லாம் பறந்து போமே. (௧௭)

---

## முப்புச் சுண்ணம்

பாராப்பால் முன்னூலா மெண்ப துக்குள்
பாடினேன் குருமுடிக்கும் பக்கு வத்தைச்
சீரப்பத் திறந்துநான் சொல்ல வில்லை
திறந்தாற்போற் பாடினேன் பூநீறு வித்தை
கூரப்பா மதனாலே குற்ற மென்று
கொட்டினே னிந்தநூ லெண்ப துக்குள்
ஆரப்பாக் கண்டு செய்வார் யோகி யானு
லறிந்துகொண்டு வழலையெடுத் தாடு வானே.

கருத்து:—இச்செய்யுள் முன் எண்பதிற் குரு முடிக்கும் வகை சரியாய்ச் சொல்லப்படவில்லை யென்றும், இந்நூலிற் சரியாய்ச் சொல்லப்பட் டிருக்கிறதென்றுஞ் சொல்லுகிறது.

சொ - ள்:—பார் அப்பால்-அதன் பிறகு சொல்லப் படுபவைகளையும் ஆராய்ந்து பார், குரு முடிக்கும் பக்குவத்தை முன் நூல் ஆம் எண்பதுக்குள் பாடினேன் - முப்புமுடிக்கும் வரலாற்றை முன் எண்

பது என்னும் நூலிற் சொன்னேன், நான் திறந்து சீர் அப்பச்சொல்ல இல்லை - அதை நான் நன்றாய் வெள்ளை யாய்ச் சிறக்கும்படி சொல்லவில்லை, பூநீறு வித்தை திறந்தாற்போல் பாடினேன் - (ஆனால்) பூ நீற்றின் செய் வழியை (படிப்பவர்க்கு) திறந்து காட்டினது போலப் பாடினேன், அதனால் - அப்படி விளங்காத படி பாடினதினால், குற்றம் கூர் அப்பாம் என்று - குற்றம் மிகவும் வந்து சேருமென் றெண்ணி, இந்த நூல் எண்பதுக்குள் கொட்டினேன் - இந்த நூலாகிய பின் எண்பதுக்குள் நன்றாய்ச் சொன்னேன், அ பா கண்டு செய்வார் யார் - அந்தப் பாட்டுகளின் புதைப் பொருளை யுணர்ந்து செய்வார் எவர்? யோகியா னால் - செய்பவன் யோகியா யிருப்பானானால், அறி ந்து கொண்டு - அப்பாட்டுகளின் புதைப் பொருளை யுணர்ந்து கொண்டு, வழலை எடுத்து ஆடுவான் - பூ நீறு முடித்தெடுத்து அதைக்கொண்டு பல ஆட்டங் கள் ஆடுவான் (பல மருந்துகள் செய்து கை யாடு வான்).

ஏகாரம் அசை. (௧௮)

ஆடுவான் வழலைதொட்டு வாதியானால்
அதைவிட்டே மூதேவி யலைவா னைப்போல்
ஓடுவான் பூமியிலே முளைத்த பூண்டை
ஒவ்வொன்றாய்ப் பார்த்துமன முருகிமாள்வான்
கூடுவான் கடைசியிலே பிச்சை வாங்கிக்
கொள்வதல்லா னூல்களுக்குக் குற்றஞ் சொல்வான்
சோடுதா னெடுத்தவனை யடித்த னன்றும்
தொடுகுறிபோ லாத்தொட்டேன் சுட்ட கல்லே.

கருத்து:—இச்செய்யுள் முப்புவின் சிறப்பை யும், அதை இன்னான் செய்வானென்பதையுஞ் சொல் லுகின்றது.

சொ - ள்:—வாதியானால் - இரசவாதஞ் செய் வதனால் பேர்பெற்றவனாகிய வாதியாயிருப்பவன், வழலை தொட்டு ஆடுவான் - பூநீறு முதலாகவுள்ள மூன்று உப்புகளால் முடிக்கப்படுகின்ற வழலை யென் னும் முப்புவைத்துணைகொண்டு மருந்துகளைக் கையாடுவான், மூதேவி - அவ்வாறாகாத மூதேவி யானவன், அதைவிட்டு - அப்படிச் செய்ய வேண்டி யதைவிட்டு, நாய்போல் அலைவான்-இங்கும் அங்கும் வீணே திரிகின்ற நாயைப்போல அலைந்து திரிவான், ஓடுவான் - கண்ட கண்ட இடங்களுக் கெல்லாம் ஓடு வான், பூமியில் முளைத்த பூண்டை ஒவ்வொன்றாய்ப் பார்த்து மனம் உருகி மாள்வான் - நிலத்தின் மேல் முளையா நின்ற பூண்டுகளை ஒவ்வொன்றாயாராய்ந்து அதனால் மனம் வருந்திக்கெடுவான், கூடுவான் - பிறகு ஓரிடத்திற் சேர்ந்திருந்து, கடைசியில் பிச்சை வாங் கிக் கொள்வது அல்லால் நூல்களுக்குக் குற்றம் சொல்வான் - கடைசியாக அவன் பிச்சை யெடுத் துண்பவனாவதுமன்றி முன்னோர் நூல்களுக்கெல் லாம் குற்றங்களையும் கற்பிப்பான், அவனைச்சோடு எடுத்து அடித்தல் நன்று ஆம் - அப்படிப்பட்டவனைச் சோட்டால் அடித்துத் தண்டித்தல் நல்லதாம், (பிறகு) சுட்டகல் - சுட்டகல் என்னும் பேருள்ள ஒன்றைத், தொடுகுறிபோல் ஆகத்தொட்டேன் -

தொட்டுக்குறிகாட்டுவதுபோல் சொல்லத் தொடங்கினேன்.

முப்புவே மருந்துகள் பலிப்பதற்கு அடியாயுள்ளதென்று கூறவந்த அவசரமாதலால் அதற்கு மிக்க சிறப்பீந்தார்.

'பூண்டு' என ஓரினத்தைக் கூறினும் செடி, கொடி, மரம் முதலியவுங் கொள்ள வேண்டும். (கஅ)

கல்லென்றால் வெள்ளைக்கல் மாக்கல் லல்லால்*
கருங்கல்லுஞ் செங்கல்லுஞ் சுக்கா னல்ல
சொல்லென்றால் யானைக்கல் வழலைக் கெல்லாம்
சோமனென்றும் ரவியென்றும் சொன்னேன்
புல்லென்றாற் பற்றாதே யந்தக் கல்லிற் [சொன்னேன்
பூரக்கல் வீரக்கல் லிரண்டாய் நிற்கும்
வில்லென்ற பூரக்கல் சத்தி யாச்சு
வீரக்கல் லுப்பாச்சங் கீச னுச்சே.

கருத்து:—இச்செய்யுள் முப்புவில் ஒன்றான சுண்ணக்கல் விகற்பங்களைக் கூறுகின்றது.

சொ - ள்:—கல் என்றால் - சுண்ணக் கல்லில் உயர்ந்தது எதுவென்றால், வெள்ளைக்கல் மாக்கல் அல்லால் - வெள்ளையாகவும் மாவாகவும் இருக்கும் கல்லே உயர்ந்த கல் ஆகுமல்லது, கருங்கல்லும் செங்கல்லும் சுக்கான் அல்ல - அதில் கறுப்பு நிற

(பா - ம்.) *நாதக் கல்லாம்.

முள்ளதும், சிவப்பு நிறமுள்ளதுஞ் சுக்கான் கல்லல்ல, வழலைக்கெல்லாம் - முப்பு செய்வதற் கெல்லாம், சொல் என்றால் - உயர்ந்த கல் சொல்லென்று கேட்டால், யானைக்கல் - பெருங்கற்களே உயர்ந்தனவாம், புல் என்றால் பற்றாது - சிறு கற்களானால் மருந்துகளுக்குக்காரம் பற்றாது, அந்தக் கல்லில் சோமனென்றும் ரவி யென்றும் பூரக்கல் வீரக்கல் இரண்டாய் நிற்கும் - அந்தக் கல்லில் சோமனென்றும், ரவி என்றும், பூரக்கல் என்றும், வீரக்கல் என்றும் இரண்டு வகையா யிருக்கும், (அவற்றில்) வில் ஒன்ற - விளக்கமமைந்த, பூரக்கல் சத்தி ஆச்சு - பூரக்கல் சத்திச்சாரக்காயிற்று, வீரக்கல் ஈசனுச்சு அங்கு உப்பு ஆச்சு - வீரக்கல்லானது சிவ சாரக்காயிற்று அதுவே அச்சமயம் உப்பும் ஆயிற்று என்று, சொன்னேன் சொன்னேன் - பல முறையிலும் சொன்னேன்.

யானை - பெருமை. புல் - சிறுமை. வில் - விளக்கம்.

ஏகாரங்கள் அசைகள். (கக)

ஆச்சப்பாற் சத்தியைவிட் டகலா துப்பு
மப்பென்று நீராலே சுத்தி யாச்சு
பேச்சப்பா விருநூற்றிற் சொன்னே னானைப்
பிண்டக்கல் வித்தைசெய்யக் கருத்தான் வேண்டும்
மூச்சப்பார் பெருநூலா யிரமும் வேண்டும்
முறைதெரியு மில்லாட்டால் வழலை வித்தை
காய்ச்சப்பா விந்நூலில் வெளியாய்ச் சொல்வேன்
காலமென்ன மீனமே டத்தைப் பாரே.

கருத்து:—இச்செய்யுள் முப்புவின் மர்மங்களெல்லாம் இன்னின்ன நூல்களை யாராய்ந்தறிய வேண்டுமென்று சொல்லுகிறது.

சொ - ள்:—அப்பால் - பிறகு, உப்பும் சத்தியை விட்டு அகலாது ஆச்சு - வீரக்கல் என்ற உப்பும், பூரக்கல் என்கிற சத்தியை விட்டு நீங்காதாயிற்று, அப்பு என்ற நீரால் சுத்தி ஆச்சு - சுத்த நீரால் அது சுத்தியாயிற்று, அப்பா - மாணாக்கனே, இருநூற்றில் பேச்சு சொன்னேன் - இருநூறு என்னும் நூலில் இதைப்பற்றிச் சொன்னேன், ஆனை பிண்டக் கல் வித்தை செய்யக் கரு வேண்டும் - பெரிய பிண்டக் கல்லின் வித்தையைச் செய்து முடிக்க கரு தேவை, (அன்றி,) பார்-இவ்வுலகத்தில், மூச்சு பெருநூல் ஆயிரமும் வேண்டும் - ஆயிரம் செய்யுள்களா லாகிய உயிரளிக்கும் பெருநூலும் இது முடிக்கத் துணையாக வேண்டும், (இவைகளிருந்தால்) முறை தெரியும் - செய்முறை தெரியும், இல்லாவிட்டால் (தெரியாது) - இவைகளெல்லாம் இல்லாவிட்டால் தெரியாது, வழலை வித்தை காய்ச்ச பா இந்நூலில் வெளியாய்ச் சொல்வேன் - வழலை காய்ச்சும் வித்தையை இந்நூலில் பாக்களால் வெளிப்படையாய்ச் சொல்வேன், (அதை நன்கு கேள்) மீனம் மேடம் காலம் என்ன பார் - பங்குனி சித்திரை மாதங்கள் தக்க காலங்களென்று யோசித்துப் பார்.

மூச்சு-உயிர். காய்ச்சப்பா என்பதைக் காய்ச்ச + பா எனப் பிரிக்க. ஏகாரங்கள் தான் அசைகள். (உம்)

பாரப்பா மிந்துவிலே விளையும் பூவே
பகற்காலம் ரவிபடவே சுண்ண மாகும்
ஊரப்பா மப்பூவிற் குறுணி வாரி
யுற்றதொரு சலத்திலிட்டுத் தெளிவு வாங்கி
நீரப்பாற் காய்ச்சினபின் மறுத ரந்தா
னிசமாக நீர்விட்டி ருத்துக் கொண்டு
காரப்பாக் காய்ச்சியபின் றேசி நீரிற்
கடந்தபின் பண்டநீர்த் தெளிவிற் காய்ச்சே.

கருத்து:—இச்செய்யுள் முப்பு செய்யும் வழியைச் சொல்லுகின்றது.

சொ-ள்:—பார்-பூமியில், அப்புஆம்-குளிர்ந்த, இந்துவில்-சந்திரன் காலத்தில், விளையும்-முளைக்கின்ற, பூ-பூ நீருனது, பகல் காலம்-பகலில், ரவி படச் சுண்ணம் ஆகும்-வெயில் பட்டால் மலர்ந்து உதிர்ந்து சுண்ணமாகும், (பின்னர் அது) ஊர் அப்பாம்-கசிந்து தண்ணீராய் விடும், (இக்குறியுள்ள) அ பூவில் குறுணி வாரி-அந்தப் பூ நீற்றில் ஒரு குறுணி வாரிக்கொண்டு வந்து, உற்றது ஒரு சலத்தில் இட்டு-அதற்கேற்ற அளவான தண்ணீரிலிட்டு, தெளிவு வாங்கி-தெளிந்த நீரை இருத்து, அப்பால்-பிறகு, நீர்-அத்தெளிவு நீரை, காய்ச்சின பின்-காய்ச்சியான பின்னர், மறுதரம்-அதை மறுமுறையும், நிசமாக நீர்விட்டு இருத்துக்கொண்டு-உண்மையாய்த் தண்ணீர் விட்டுத் தெளிவிருத்துக் கொண்டு, கார் அப்பாக் காய்ச்சியபின்-மாசு இல்லாமல் காய்ச்

சின பின், தேசி நீரில் - கழுதை நீர் விட்டுக் கரைத் துத் தெளிவிருத்துக் காய்ச்சி, கடந்த பின்பு - தீர்ந்த பிறகு, அண்ட நீர்த் தெளிவில் காய்ச்சு - கற்சுண்ண நீர்த் தெளிவுவிட்டுக் கரைத்துத் தெளிவிருத்துக் காய்ச்சுவாயாக.

ஊர்தல் - கசிதல். கார் - குற்றம். ஏகாரங்கள் அசைகள்.

தேசி நீர் - கழுதை நீர். இதை,

ஆமென்ற தேசியிலே யநேக வித்தை
ஆருந்தான் சொல்லார்க ளவற்றைக் கேளாய்
காமென்ற தேசியென்ன கடைப்பி றப்பு
கருவறியா மாந்தரெல்லாங் கழுதை யென்பார்
காமென்ற வெழுபிறப்புங் கடந்து போச்சு
காசினியில் மறுபிறவி யில்லை யில்லை
தேமென்ற கழுதை யென்றால் சிவத்துக் கொக்குந்
தேசிகனு மென்றுசித்தர் செப்பி னரே.

செப்பினர் தேசியிட வித்தை கேளாய்
திரமான பாடாண மறுபத்து நான்குஞ்
செப்பினர் சுத்திசெய்யத் தேசி நீராம்
சிறப்பான வந்நீரிற் பூநீ றிட்டு
நப்பியே கலக்கியந்தத் தெளிவை வாங்கி
நலமாகச் சொல்லியதோர் சரக்கெல் லாந்தான்
செப்பியே கடுஞ்சுத்தி யாகும் பாரு
செப்பரிய விதைவிட்டாற் செயமா காதே.

என்பதா லறிக. (உக)

காய்ச்சியபின் பிரமக்கல் சுண்ணம் பண்ணிக்
கம்பியுப்புச் சுண்ணமுடன் மூன்று நேராய்த்
தாழ்ச்சியது வாராமற் கரைத்தங் கொன்றாய்த்
தணலிலிட்டுக் குழம்பான பருவந் தன்னிற்
பாய்ச்சிடுவாய் பாரையுப்பு சீன காரம்
பாடாணம் வீரமொடு சாரங் காரம்
கூச்சமில்லை துருசோடு பொடித்துக் கொண்டு
கொட்டுவா யிளகிநிற்குங் குளம்பிற் றானே.

கருத்து:—இச்செய்யுள் முப்புசெய்யும் வழியின் தொடர்ச்சி சொல்லுகின்றது.

சொ - ள்:—காய்ச்சிய பின் - இவ்வாறு அப்பூ நீற்றைக் காய்ச்சி உப்பாக்கி வைத்துக்கொண்ட பின்னர், பிரமக்கல் சுண்ணம் பண்ணி - பிரமக்கல் என்னும் சுண்ணக்கல்லைப் பற்பம் பண்ணி வைத்துக் கொண்டு, (பிறகு) கம்பி உப்பு சுண்ணம் - கம்பியுப்பென்னும் வெடியுப்புச் சுண்ணம் செய்துகொண்டு, மூன்றும் உடன் நேராய் - இம் மூன்று சுண்ணங்களையும் உடனே ஓரளவாய் நிறுத்து, தாழ்ச்சி அதுவாராமல் - குறைச்சலில்லாமல் சேர்த்து, அங்கு ஒன்றாய்க் கரைத்து - அப்பொழுது ஒன்றாய்க் கரைத்து, தணலில் இட்டு - நெருப்பில் வைத்து எரித்து, குழம்பு ஆன பருவத்தில் - எரிந்து குழம்பான பருவத்தில், பாரையுப்பு சீனகாரம் பாடாணம் வீரம் சாரம் காரம் துருசு - பாரையுப்பு, படிகாரம், வெள்ளைப் பாடாணம், வீரம், நவாச்சாரம், வெங்காரம், மயில் துத்தம் ஆகிய இவ்வேழு சரக்குகளையும் தனித்தனி ஒவ்வொரு

கழஞ்சு எடுத்து; பொடித்துக் கொண்டு - எல்லா வற்றையும் ஒன்றாகச் சேர்த்துப் பொடிசெய்ததை வைத் துக்கொண்டு, இளகி நிற்குங் குளம்பில் - முன்னர் இளகி இருக்கின்ற அம் மூன்றுப்புஞ் சேர்த்துக் காய்ச்சின குழம்பில், பாய்ச்சிடுவாய் கொட்டுவாய் - விசிறிக் கொட்டுவாய். கூச்சம் இல்லை - இதனால் எவ் வகையான அச்சமுமில்லை.

ஏகாரம் அசை. தன், ஒடு இசை நிறை. (உஉ)

குளம்பான மருந்தையெலாங் காரோட் டிட்டுக்
கொடுரவியிற் றிங்களொன்று குணமாய் வைத்துத்
தளும்பாமற் சாராயம் படிநா லுக்குள்
தான்விட்டுக் கலக்கிவைப்பாய் ரவியினுள்ளே
*          *          *          *
*          *          *          *
விளம்பாமல் மத்துகொண்டு கடைந்து நீரை
வெயில்முகத்திற் பாரையிலே விசிறு வாயே.

கருத்து:—இச் செய்யுள் முப்புசெய்யும் வழி யின் தொடர்ச்சி சொல்லுகின்றது.

சொ - ள்:—குளம்பு ஆன மருந்தையெல்லாம்— அவ்வாறு காய்ச்சிக் குழம்பிய மருந்தையெல்லாமும், கார் ஓட்டிட்டு - பெரிய ஓட்டிற் போட்டு, திங்கள் ஒன்று - ஒரு மாதம் வரைக்கும், குணம் ஆய்க் கொடு ரவியில் வைத்து - நல்லறிவுடன் வெயிலில் வைத்து, நாலுபடி சாராயத்துக்குள் தளும்பாமல் விட்டு - பிறகு நான்குபடி சாராயத்துக்குள் மிகுதிப் படாமல்

விட்டு, ரவியினுள் கலக்கி வைப்பாய் - சூரியனில் நன்ருய்க் கலக்கிவைப்பாய், அவ்வாறு வைத்து, விளம்பாமல் - ஒருவருக்குந் தெரிவிக்கா வண்ணம், மத்து கொண்டு கடைந்து - மத்திஞல் கடைந்து, நீரை-அக் கடைந்த நீரை, பாரையில் வெயில் முகத்தில் விசிறுவாய் - ஒரு பாரையின்மேல் வெயிலில் வீசி விடுவாய்.

மூன்ருவதடி கிடைக்கவில்லை.

தளும்பல்-மிகுதல். ஏகாரங்கள் அசைகள். (உரு)

விசிறவே பூப்போலப் பொங்கி நிற்கும்
விளைந்தவுப்பைப் பக்கமது மேலே சென்ருல்
அசிரமே வப்பூவிற் பலந்தான் வாங்கி
அந்தெடைக்கு நேர்பாதி பூரம் வீரம்
தசிரமே குருவண்டு கழஞ்சு சேர்த்துச்
சாதகமாய்க் கல்வத்தி லிட்டுக் கொண்டு
பிசிரதா யறுவகைநீர் தன்ஞ லாட்டிப்
பிடித்திடுவாய் வில்லையது பெருமை தானே.

கருத்து:—இச்செய்யுள் முப்பு செய்யும் வழியின் தொடர்ச்சி கூறுகின்றது.

சொ - ள்:—விசிற பூபோல பொங்கி நிற்கும் - (அக்குழம்பைப்) பாரையின்மேல் விசிற பூவைப் போல் பொங்கி யிருக்கும், விளைந்த உப்பை - அப்படி பொங்கி உண்டான உப்பை, பக்கம் அதுமேல் சென்ருல்-ஒரு பக்ஷமாகிய பதினைந்து நாள் சென்ற பிறகு, அசிரம்மேவு - வெள்ளையாகிய, அபூவில் பலம் வாங்கி- அந்த உப்பில் ஒரு பலம் எடுத்துக் கொண்டு, பூரம்

வீரம் - பூரமும் வீரமுமாகிய இரண்டு சரக்குகளை யும், அந்த எடைக்கு நேர்பாதி - அந்த எடை யாகிய ஒரு பலத்திற்குச் சரிபாதியான அரைப் பல மும், தசிரம்-உள் துளையையுடைய, குருவண்டுகழுஞ்சு சேர்த்து - குருவண்டு ஒன்றேகால் வராகனெடையு மாகக் கூட்டி, சாதகமாய் - கைப் பழக்கப்படி, கல் வத்தில் இட்டுக்கொண்டு - இவைகளை யெல்லாம் கல் வத்தி லிட்டுக்கொண்டு, அறுவகை நீர் தன்னால் - அறுவகைச் செய் நீரால், (ஜயநீரால்) பிசிர் அது ஆய் ஆட்டி-கொஞ்சங் கொஞ்சமாய் விட்டரைத்து, வில்லை யது பிடித்திடுவாய் - பில்லை செய்வாய், பெருமை தான் - இது மிகவுஞ் சீர்த்தி யுடையதே யாம்.

அசிரம் - வெண்மை, தசிரம் - உள்துளை, பிசிர் - துளி. கொஞ்சம் என்னும் பொருளது.

ஏகாரங்கள் அசைகள். (உச)

பெருமையென்ற சட்டியொன்றிற் கிளிஞ்சிற் சுண்ணம்
பேராகப் பாதியிட் டதின்மேல் வில்லை
அருமையென்ற வதின்மேலே சுண்ணங் கொட்டி
அமுக்கியே மேற்சட்டி கவிழ்த்து மூடி
ஒருமையென்ற சீலைமண் ணேழுஞ் செய்தே
யுத்தமனே யெண்சாமந் தீயை மூட்டி
வறுமையில்லை முத்தீயு மூட்டும் போது
வயிரவற்கு மாயிக்கும் வணக்கஞ் செய்யே.

கருத்து:—இச் செய்யுள் முப்பு செய்யும் வழி யின் தொடர்ச்சி கூறுகின்றது.

சொ - ள்:—பெருமையென்ற சட்டி ஒன்றில் - ஒரு பெரிய சட்டியில், கிளிஞ்சில் சுண்ணம் பேர்பாதியாக இட்டு - பாதி சட்டிவரையில் கிளிஞ்சிற் சுண்ணம்பு போட்டு, அதின்மேல் வில்லை - அதன்மேல் பில்லையை வைத்து, அருமை என்ற அதின்மேலே சுண்ணம் கொட்டி - அரியதென்று சொல்லப் படுகின்ற அப் பில்லையின்மேல் மற்றபாதி கற் சுண்ணத்தைக் கொட்டி, அமுக்கி-நன்ருய் அழுத்தி, மேல்சட்டி கவிழ்த்து மூடி - அந்தச் சட்டியின்மேல் வேறொரு சட்டி கவிழ்த்து மூடி, ஒருமையென்ற - தனித் தனியாய்ச் செய்யப் படுவதென்று சொல்லப்படுகின்ற, ஏழுமண் சீலையும் செய்து-ஏழுமண் சீலைசெய்து, உத்தமனே - நன் மாணுக்கனே! எண் சாமம் தீயைமூட்டி- அடுப்பின்மேல் வைத்து எட்டுச் சாமம் வரைக்கும் தீபோட்டு, வறுமையில்லை - அச் சாமங்களுக்குக் குறையாதபடி, முதீயும் மூட்டும்போது - தீபாக்கினி, கமலாக்கினி, காடாக்கினி ஆகிய மூன்று தீக்களையும் போடும்போது, வயிரவற்கும் ஆயிக்கும் வணக்கஞ் செய் - வயிரவனுக்கும் உமாதேவிக்கும் வணக்கஞ் செய்வாய்.

மூவகை நெருப்பாவன: ஒருசாண் நீளமும் இரண்டு விரற்கனமு முள்ள விறகு ஒன்று தீபாக்கினி, இரண்டு விறகு கமலாக்கினி, நான்கு விறகு காடாக்கினி என்பன. இவற்றை;

"மூடியே வாலுகையின் மேலே யேற்றி
முசியாதே யொருவிறகு தீப மாகும்

நாடியே யிருவிறகு கமல மாகும்
நால்விறகு காடாக்கினி யாகும் பாரு
சாடியே விறகினிட திட்டங் கேளு
சாணீள மிரண்டுவிரற் கனதி யாகும்."

என்பதாலறிக.

ஏகாரங்கள் அசைகள். (உரு)

வணக்கஞ்செய் தாறவிட் டெடுத்துப் பாரு
மல்லிகைப்பூப் போலிருக்கும் வழலைச் சுண்ணங்
குணக்கமில்லை யிச்சுண்ணந் துருசுக் கப்பிக்
கொடுரவியிற் போட்டிடவே சுண்ண மாகும்
மணக்குமே வாடைபட்டாற் சூத ராஜன்
மதிமயங்கிக் கட்டுமடா வாத வேலை
கூஷணப்பொழுதி லுண்டாகுங் கோச பீசந்
தனையறிந்த வாதிமகன் வயித்திய னாமே.

கருத்து:—இச்செய்யுள் முப்புசெய்யும் வழியின் தொடர்ச்சி கூறுகின்றது.

சொ - ள்:—வணக்கம் செய்து ஆறவிட்டு எடுத்துப் பார் - இவ்வாறு வணங்கி எரித்து ஆறினபின் எடுத்துப் பார்ப்பாய், வழலைச் சுண்ணம் மல்லிகைப் பூப்போல் இருக்கும் - முப்புச் சுண்ணம் மல்லிகைப் பூவைப்போல் வெண்மையாயிருக்கும், குணக்கம் இல்லை - குறைவில்லை, இ சுண்ணம் துருசுக்கு அப்பி- இச்சுண்ணத்திற் கொஞ்சம் விதிப்படி எடுத்து நீரிற் குழைத்து மயில் துத்தத்துக்குப் பூசி, கொடு ரவியில்

போட்டிட சுண்ணம் ஆகும் - கொடிய வெயிலிற் போட அதுவுஞ் சுண்ணமாகும், சூதராஜன் - எழு வகை அல்லது எண்வகை சுத்தி செய்யப்பட்ட இர சத்தில், வாடை பட்டால் - இம் முப்புவின் வாடை பட்டாலும் அம்முப்புவால் முடிக்கப்பட்ட துருசு சுண்ணத்தின் வாடை பட்டாலும், மணக்கும் - அத் துடன் கலக்கும், (அன்றி) மதிமயங்கிக்கட்டும் - தன் வன்மையின்றிக் கட்டும், வாதவேலை சூக்ஷணம் பொழு தில் உண்டாகும் - கொஞ்ச நேரத்தில் வாதமுடித் தற் றொழில்கூடும், கோசபீசந்தனை அறிந்த வாதி மகன் வயித்தியனும் - மேற்சொன்ன முப்பு முடிக்கும் வழியுணர்ந்த வாதியாகிய மகன் வயித்தியனுவான்.

கோசபீசம், முப்பு என்றதை,

"பாரென்ற நாதத்தில் விந்து புக்கிப்
பாங்கான பிருதிவியு மப்பு வாய்வு
மாரென்ற வைவருந்தான் சேர்ந்த தாலே
அருவுருவா யைங்கோச பிண்ட மாச்சு
சாரென்ற வழலையென்று முப்பு வென்றுஞ்
சவர்க்கார குருவென்று மிதற்கே பேராம்
பாரென்ற கோசபீச மிதற்கே பேராம்
பஞ்சபூத சாக்கென்று மிதற்கே பேராம்
பாரென்ற விதைமறைத்துச் சித்த ரெல்லாம்
பலபலவாய் நூல்தோறும் பாடினுரே."

என்னும் இச்செய்யுளாலறிக.

குணக்கம் - வளைதல். குறைதல் என்னும் பொரு ட்டு. மணத்தல் - கலத்தல். ஏகாரங்கள் அசைகள், உகரம் சாரியை. அடா ஆச்சரியம். (உக)

வயித்தியனே யானக்கால் முப்பூ வேண்டும்
மறந்துவிட்டுச் செய்வதிலே சீர்த்தி யென்ன
சயித்தியமா யுபசார வார்த்தை சொன்னால்
தம்பிக்கு வந்தவினை தானே போமோ
நயத்தினிலே நவலோக பாடா ணங்கள்
நற்பூண்டு தழையாலே பற்பஞ் செய்வீர்
பயித்தியமோ வுங்களுக்கு நோய்க டீர்க்கப்
பண்டிதமோ கண்டிதமாய்ப் பார்த்தி டீரே.

கருத்து:—இச்செய்யுள் மருத்துவனுக்கு அறிவுபுகட்டல் கூறுகின்றது.

சொ - ள்:—வயித்தியனே ஆனக்கால் முப்பூ வேண்டும்-வயித்தியனாக விருந்தால் முப்பூ அவசியம் வேண்டியது,மறந்துவிட்டு செய்வதில் சீர்த்தி என்ன-அம்முப்பூவை மறந்து வயித்தியஞ் செய்வதில் புகழில்லை, சயித்தியமாய் உபசார வார்த்தை சொன்னால் தம்பிக்கு வந்த வினை தானே போமோ-சயித்தியோபசாரமான சொற்கள் சொல்லி வந்தால் நோயாளிக்கு வந்தநோய் தானே போய்விடுமா? (போகாது) நவலோகம் பாடாணங்கள் - ஒன்பது வகை லோகங்களையும் பாடாணங்களையும், நல்பூண்டு தழையால் நயத்தினில் பற்பஞ் செய்வீர் - உயர்ந்த பூண்டுகளைக் கொண்டும் இலை வகைகளைக் கொண்டும் எளிமையாகப் பற்பஞ் செய்வீர்கள், பயித்தியமோ உங்களுக்கு நோய்கள் தீர்க்க - (அப்படி முடிக்கப்படும் மருந்துகளைக் கொண்டு) உங்களுக்கு நோய்கள் தீர்க்க

முடியாது; அப்படி கொள்வது பயித்தியமே, கண்டிதமாய்ப் பண்டிதம் பார்த்திடீர் - கண்டிப்பாய் வயித்தியஞ் செய்யுங்கள்.

ஏகார ஓகாரங்கள் அசைகள்.

இந்நூற் றலைவர் காரசாரஞ் சொல்லுமிடமாகையால் அதையே சிறப்பித்துக் கூறினார் எனக்கொள்க. அதனாலேயே பூண்டு, தழை முதலியவைகளை இழித்தனர். அவைகளால் முடிக்கப்படும் மருந்துகள் பயனற்றவை யென்ற கொள்கை யன்று. அக் கொள்கையாயின் இவர் பூண்டு, தழை முதலியவைகளையும் அவற்றால் முடிக்கப்படும் மருந்துகளையும் கூறாமை வேண்டும். (உஎ)

பாராமற் செய்வதிலே தோடந் தோடம்
பழையபுண் ணாளிமுழு வயித்தியனே யாவான்
கூறும விருக்கவில்லைச் சாத்தி ரங்கள்
குணமுள்ள ராசியென்றாற் பலிக்கு நூல்கள்
தேராமற் சொற்கேட்டுப் பரிகா ரத்தைச்
செய்வதினாற் பழிபாவஞ் சிக்குஞ் சிக்கும்
கூறான வுலகத்தி னுயிரை யெல்லாங்
கொல்வதற்காத் தலையெடுத்த கூற்றன் றானே.

கருத்து:—இச் செய்யுளும் மருத்துவனுக்கு அறிவு புகட்டல் கூறுகின்றது.

சொ - ள்:—பாராமல் செய்வதில் தோடம் தோடம் - நூல் முதலியவற்றை எண்ணாமல் வயித்தி

யஞ் செய்தல் மிக்க குற்றமாம், பழையபுண்ணுளிமுழு வயித்தியனே ஆவான் - நீடித்த நோயாளி யானவன் பலரிடம் பல மருந்துண்டு வழக்கப் பட்டவனுதலின் அவனும் பெருவயித்தியத் தன்மை யடைந்தவனு வான், சாத்திரங்கள் கூருமல் இருக்க இல்லை - மருத்துவ நூல்கள் சொல்லப்படாமலில்லை, நூல்கள் குணமுள்ளராசி என்ருல் பலிக்கும்-அந்நூல்கள் நல்ல ராசியில் பிறந்தவனுனுலும் நல்ல திசை உள்ளவனுனுலும் கைகூடும், தேராமல்-நூலாராய்ச்சியிற் றெளிந்து செய்யாமல், சொல்கேட்டு பரிகாரத்தைச் செய்வதினுல் - ஒருவர் சொல்லைக்கேட்டு வயித்தியஞ் செய்வதினுல், பழி பாவம் சிக்கும் சிக்கும் - பழிப்பும் பாவமும் மிகவும் உண்டாகும், கூருன உலகத்தில் உயிரை எல்லாம் கொல்வதற்கா தலை யெடுத்த கூற்றன் தானே - (ஆகையால் அப்படி செய்பவன்) பல கூறுபாடுகள் அமைந்த இவ் வுலகத்திலுள்ள உயிர்களை யெல்லாம் கொல்வதற்காகப் பிறந்த எமனுக்கு ஒப்பாவான்.

எனவே, ஆயுள் நூலாராய்ந்து செய்பவனே வயித்தியனென்றும், பிறன் எமனென்றுங் கூறியவாருயிற்று.

ஏகாரங்கள் அசைகள். (உஅ)

---



# இரசப்படங்கு

கூற்றுகு நோய்களுக்கு ரசப் படங்கு
கூறுகிறேன் புலத்தியனே கூர்ந்து கேளாய்
பாற்றான தோண்டிரண்டு சமனாய் வாங்கிப்
பகர்தோண்டிக் கரைவாசி யுப்பை யிட்டு
மாற்றான கந்தகமும் பர்ப்பா டகமு
மாஞ்சிலொடு வெள்ளைப்பா டாண நான்கு
நீற்றான வகைக்குமரைக் கழஞ்சு வீதம்
நீயெடுப்பாய் வெற்றிலைச்சா றாட்டி யாட்டே.

கருத்து:—இச்செய்யுள் இரதப்படங்கு செய்யும் வழியைக் கூறுகின்றது.

சொ - ள்:—கூற்று ஆகும் நோய்களுக்கு ரசப் படங்கு கூறுகிறேன் -இயமனைப்போல் வருத்து கின்ற மேக நோய்களுக்கு ரசப்பதங்கம் சொல்லு கிறேன், புலத்தியனே கூர்ந்து கேளாய் - புலத்தியன் என்னும் பேருள்ள மாணுக்கனே! நீ அமைதியாய் அறிவுடன் கேட்பாயாக; பால் து ஆன இரண்டு தோண்டி சமனாய் வாங்கி - (நன்குவெந்து) பாக் கமைந்த ஒரே அளவுள்ள இரண்டு தோண்டிகள் எடுத்து, பகர் தோண்டிக்கு அரைவாசி உப்பை இட்டு- (அத்தோண்டிகளில்) சொல்லப்படுகின்ற ஒரு தோண்டியில் அரைவாசி உப்பை இடித்து வெயி லில் உலர்த்தியிட்டு வைத்து; மாற்றான - ரசத்திற்கு மாற்றான, கந்தகமும் பர்ப்பாடகமும் மாஞ்சிலொடு நீற்று ஆன வெள்ளைப் பாடாணம் நான்கும் - சத்தி

செய்த நெல்லி கந்தகம், பர்ப்பாடகம், சடாமாஞ் சில், நீற்றுவதற்குரியதான வெள்ளைப் பாடாணமாகிய இந்த நான்கு சரக்குகளையும், வகைக்கும் அரை கழஞ்சுவீதம் நீ எடுப்பாய் - வகை ஒன்றுக்கு அரைக் கழஞ்சு என்னும் அரையே அரைக்கால் வராக னெடையாக எடுத்து, நான்கு சரக்குகளுக்குஞ் சேர்ந்த இரண்டரை வராகனெடையான கால்பலத் தைக் கல்வத்திலிட்டு, வெற்றிலைச்சாறு ஊட்டி ஆட்டு - வெற்றிலைச் சாறு விட்டு அரைப்பாய்.

ஏகாரம்-அசை. கூற்று-நமன். பாற்று-பால்+து எனப்பிரிக்க. (உகூ)

ஊட்டியே கல்வத்தி லரைத்துக் கொண்டே
யுற்றமருந் தகல்போலப் பிடித்து வர்த்தி
நாட்டியே யிரண்டுபலம் ரசத்தை விட்டு
நற்பாண்ட வுப்பின்மேல் நடுவே வைத்துக்
காட்டியே யுப்பினைமேல் மறையத் தூவிக்
கவிழ்த்தியே மேற்பாண்டஞ் சீலை செய்து
தீட்டியே யடுப்பேற்றி யெட்டுச் சாமந்
தீயெரித் தாறவிட் டெடுத்தி டாயே.

கருத்து:—இச்செய்யுளும் இரசப்படங்கு செய் யும் வழியையே கூறுகின்றது.

சொ - ள்:—ஊட்டி கல்வத்தில் அரைத்துக் கொண்டு - முன் சொன்னபடி கல்வத்திலிட்டு நன் ருய் அரைத்துக்கொண்டு, உற்றமருந்து அகல்போலப்

பிடித்து உலர்த்தி - அவ்வாறு அரைக்கப்பட்டு மெழு கான மருந்தை ஒரு அகல்போலப் பிடித்து உலர்த்தி அதில், இரண்டுபலம் ரசத்தை நாட்டி விட்டு-இரண்டு பலம் சுத்திசெய்த ரசத்தைவிட்டு, நல்பாண்ட உப் பின்மேல் நடுவைத்து - (அவ்வகலை) நல்ல முன்பாண் டத்தின் உப்பின்மேல் நடுவே வைத்து, உப்பினை மேல்மறையக்காட்டித் தூவி - கொஞ்சம் உப்பை அவ்விரசம் மறைய லகுவாகத் தூவி, மேல்பாண்டம் கவிழ்த்தி – மேற்சட்டி மூடி, சீலை தீட்டிச்செய்து - மண் சீலையை நன்றாய்த் தீட்டிச்செய்து, அடுப்பு ஏற்றி- அடுப்பின்மேல் வைத்து, எட்டுசாமம் தீ எரித்து - எட்டுச்சாமம் என்னும் தற்கால இருபத்து நான்கு மணிநேரம் எரித்து, ஆறவிட்டு எடுத்திடாய் - ஆற விட்டு நன்றாயாறினபின் எடுத்துக் கொள்வாய்.

ஏகாரங்கள் - அசைகள். தீட்டுதல் - ஒழுங்கு படுத்தல். (ரு ௰)

ஆறவிட்டு மேற்றோண்டிக் குள்ளே பாராய்
அழியாதி ரசப்படங்கு மேறி நிற்கும்
வாரவிட்டுப் பன்றிமூடி யதனால் மெள்ள
வாங்கியே பீங்கானி லடைத்துக் கொண்டு
சாரவிட்ட பணவெல்ல நல்ல வெல்லஞ்
சர்க்கரைவா ழைப்பழத்திற் றனுண் பாயேல்
ஊரைவிட்டே யோடிப்போம் நாளே மூக்குள்
உண்டான பறங்கிமுதல் சூலை நோயே.

கருத்து:—இச்செய்யுள் இரசப்படங்கு செய்யும் வழியின் தொடர்ச்சியையும், அதைக் கொடுக்கும் வழியையும், அதனால் தீரும் நோய்களையும் கூறுகின்றது.

சொ - ள்:—ஆறவிட்டு - அச்சட்டிகளை நன்றாய் ஆறவிட்டுப்பிரித்து, மேல்தோண்டிக்கு உள்பாராய் - மேல்தோண்டியின் உள்ஆழத்திற் பார்ப்பாய், இரசப் படங்கும் அழியாது ஏறி நிற்கும் - இரசப்படங்கமானது யாதொரு குற்றமுமில்லாமல் ஏறியிருக்கும், பன்றிமுடி வாரவிட்டு-(அதை) பன்றி மயிர் முடியை வாரும்படி விட்டு, அதனால் மெள்ளவாங்கி - அதனால் மெதுவாக வழித்து, பீங்கானில் அடைத்துக் கொண்டு -பீங்கானிலாவது புட்டியிலாவது வைத்துக் கொண்டு, சார இட்ட - உடலுக்கு நன்மை சாரும் படி செய்யப்பட்ட, பனைவெல்லம் நல்லவெல்லம் சர்க்கரை வாழைப்பழத்தில் - பனைவெல்லத்திலாவது, நல்லவெல்லத்திலாவது, சர்க்கரையிலாவது, வாழைப் பழத்திற்குள்ளாவது, உண்பாயேல் - வைத்துச் சாப்பிடுவாயானால், நாளேழுக்குள் - ஏழுநாள்களுக்குள், உண்டான - கர்மத்தாலுண்டான, பறங்கிமுதல் சூலை நோய் - வெண்குட்டம் முதலாகச் சொல்லப்பட்ட குட்ட நோய்கள், ஊரைவிட்டே ஓடிப்போம் - நோயாளியை விட்டுப்போவனவல்லாமல் அவனிருக்கும் ஊரையும் விட்டு ஓடிப்போய் விடுவனவாம்.

நோய் விரைவிற் றீர்தலால் மற்றவரைத் தொடர்தற்கு வழியில்லையென்பார், 'ஊரைவிட்டே யோடிப்போம்' என்றார்.

தான், ஏக்கள் அசைகள். வார்-வினை. சார்தல்-சேர்தல். (௩க)

சூலைபோம் ரசசூலை வாயிற் கட்டில்
துடியாகக் கரிவேலின் பட்டைத் தண்ணீர்
காலையிலு மாலையிலும் வாயி லூற்றிக்
கலக்கவே கொப்புளிக்க வீக்கந் தீரும்
மூலமதிற் கடுப்பிரத்த மிகுத்த தானால்
மூட்டுவாய் பாற்கஞ்சி யிளஞ்சூ டாகப்
பாலகனே மாதரது சையோ கத்தில்
பதறுதே மூன்றுதிங்கள் பத்தியமே யாமே.

கருத்து:—இச்செய்யுள் அவ்விரசப் படங்கால் உண்டாம் விரணந் தீரக் குடிநீரும், அம்மருந்துக்குப் பத்தியமும் கூறுகின்றது.

சொ - ள்:—சூலைபோம் - மேற் சொல்லப் பட்ட சூலைநோய் போய்விடும், ரசசூலை வாயில் கட்டில் - ரசத்தாலுண்டாகக் கூடிய விரணம் வாயினெயிற்றில் உண்டானால், கரிவேலின் பட்டைத் தண்ணீர் காலையிலும் மாலையிலும துடியாக வாயில் ஊற்றிக் கலக்கக் கொப்புளிக்க - கரிவேலின் பட்டையை இடித்திட்டு நீர் விட்டுக் காய்ச்சின குடி நீரைக் காலையிலும் மாலையிலும் சீக்கிரமாக அவ்விரணங்களிற் கலக்கும்படி வாயிலூற்றிக் கொப்புளித்தால், வீக்கம் தீரும் - அவ்வெயிற்றடிகளிலுண்டான விரணத்துடன் கூடின வீக்கந்தீரும், மூலத்தில் - மூலஇடத்தில், கடுப்பு - நோயுடன் கூடின, இரத்தம் மிகுத்ததானல்-

இரத்தக் கொட்டல் மிகுதிப்பட்டதானல், இளஞ் சூடாகப் பால்கஞ்சி யூட்டுவாய் - புழுங்கல் அரிசி நொய்யுடன் பசுவின்பால் கூட்டிக் காய்ச்சின கஞ்சி யாவது, இரண்டுமுறை வடித்த சோற்றுடன் பசுவின்பால் சேர்த்து மூன்ருவதுமுறை வேகவைத்த சோற்றுக் கஞ்சியாவது சிறு சூடாகக் கொடுப்பாய், பாலகனே - வழக்கும் ஆராய்ச்சியும் முற்றுப்பெருத சிறியவனே! மூன்று திங்கள் மாதரது சையோகத்தில் பதருது - மூன்றுமாதம் வரைக்கும் பெண்மயக்கில் மனதைவிடாமலிருப்பது, பத்தியம் ஆம் - அவ்விரசப்படங்குக்குரிய பத்தியமாகும்.

ஏகாரம் மூன்றும் அசைகள்.

ரசசூலைக்குக் கரிவேலின் பட்டைத் தனிக்குடிநீர்மட்டும் கூறினும் மற்றவையுமுடன் சேர்த்துக் காய்ச்சுங் குடிநீரே சிறப்புடைத்தாம். அது :

"களிகடு கருவேல் கருநெல்லி நாவல்
வளிதீ யெரிநீர் வைத்திடு கொப்புளி
வாய்வேக மதுவிடும்"

என்பதாம். மூலக் கடுப்புக்குப் பாற்கஞ்சியுடன்,

"வைத்திடு வறுகும்
காய்நீர் மிளகுட னிட்டிடு வெண்ணெயை
அதிலிடு குடிரச வீற தடிபடும்"

என்ற குடிநீரையுங் குடிப்பது மிகச் சிறப்பாம்.

இரச மருந்துக்குப் புளியும் உப்பும் பெண்ணும் விடக்கூடியவைகளாயினும் பெண்பத்தியம் மிக்குயர்ந் தது. அதனை அகத்தியர் ஒரு நூலில்,

"பொல்லாதபாய் மிதிக்கப்போகாது"

என்று நன்கு பயமுறுத்தியுள்ளார். (௯௨)

---

## அரிதார பற்பம்

பத்தியமா மரிதார பற்பஞ் சொல்வேன்
பருங்கட்டி யாகவொரு பலமே வாங்கிச்
சத்தியமாய்ச் சுண்ணாம்புக் கல்லிற் சுத்தி
தாழ்வில்லா தீரைந்து தரமே செய்து
முற்றியாய் வெடியுப்புச் சுண்ணம் வீர
முடியான பூநீறு சீனு காரம்
வெற்றியாம் வெள்ளையெருக் கம்பா லாட்டி
மேலான கட்டிக்குக் கவசஞ் செய்யே.

கருத்து:—இச்செய்யுள் அரிதார பற்பம் செய் யும் வழியைக் கூறுகின்றது.

சொ - ள்:—பத்தியம் ஆம் - முன் சொல்லப் பட்டவைகளே பத்தியமாம். அரிதார பற்பம் சொல்வேன் - (இனி) அரிதார பற்பம் செய்யும் வகை யைச் சொல்கின்றேன், ஒரு பலம் பருங்கட்டி ஆக வாங்கி - அரிதாரம் ஒரே கட்டியாக ஒரு பலம் எடுத்து, சுண்ணாம்புக் கல்லில்-(அதை) சுண்ணாம்புக் கல்லின் இடையில் வைத்துத் தாளித்து எடுத்துக்

கழுவி உலர்த்தி இவ்வாறாக, ஈர் ஐந்துதூரம் தாழ்வில் லாது சத்தியமாய்ச் சுத்தி செய்து - பத்து தூரத்துக்குக் குறையாமல் உண்மையாய்ச் சுத்தி செய்து, (அதை வேறேயுலர்த்தி வைத்துக் கொண்டு) முற்றியாய் - நன்றாய் முடிந்ததென்றாராய்ந்த, வெடியுப்புச் சுண்ணம் வீரம் - வெடியுப்புச் சுண்ணமும் வீரமும், மூடியான பூநீறு - கனத்த பூநீறும், சீனகாரம் - படிகாரமும், வெற்றி ஆம் - நெருப்பை வென்ற, வெள்ளை - வெள்ளைப் பாடாணமும், (ஆகிய ஐந்து சரக்குகளும் வகை ஒன்றுக்கு இரண்டு வராகனெடை யெடுத்து) எருக்கம் பால் ஆட்டி - எருக்கம் பால் விட்டு நன்றாய் அரைத்து, (அதை) மேலான - சுத்தி செய்து உயர்ந்ததாயிருக்கிற முன்சொல்லப்பட்ட, கட்டிக்கு - அரிதார கட்டிக்கு, கவசஞ் செய் - நன்றாய்க் கனக்கப் பூசுவாய்.

ஏகாரம் மூன்றும் அசைகள்.

'வெள்ளை எருக்கம் பாலாட்டி' என்பதற்குச் சிலர் வெள்ளைப் பாடாணத்தை நீக்கி வெள்ளை யெருக்கம் பால் என்று பொருள் கொள்கின்றனர். அது பொருந்தாதென்பதை;

"தஞ்சான பூநீறு வீரம் பூரம்
சாரமொன்று காரமொன்று தாயு மொன்றே.

தாயுமொன்று வெடியுப்புத் தார மொன்று
தவளமென்ற வெள்ளையொன்று தானே கூட்டிப்
பாயுமென்ற வெருக்கம்பால் விட்டங் காட்டிப்
பற்பமென்ற வகைக்கெல்லாம் குருவைச் சேர்த்துக்

காயுமென்ற கவசமிட்டுச் சீலை செய்து
கனமான வோட்டிலிட்டு மண்ணுஞ் செய்து
தீயென்ற நூற்படிக்குப் புடத்தைப் போடு
சிவசிவா விருநூறுந் திடந்தான் பாரே.

என்பதாலறிக. (௫௫)

கவசமிட்ட கட்டிதனைக் காய வைத்துக்
கனபுரசம் பட்டையதின் சாம்பற் குள்ளே
நிவசமிட்டுச் சீலைமண் ணேழுஞ் செய்து
நிலவரமா யடுப்பேற்றி நினைவாய் முத்தீ
திவசமிட்டு நாற்சாம மெரிக்க நீறும்
சிவசிவா அரியினது தேவி நாதம்
தவசிகட்ட வேண்டுமல்லா லுலகத் தாரோ
க்ஷயரோகஞ் சுரரோகந் தாங் காணுவே.

கருத்து:—இச்செய்யுளும் அரிதார பற்பம் செய்யும் வழியின் தொடர்ச்சி கூறுகின்றது.

சொ - ள்:—கவசம் இட்ட கட்டிதனைக் காய வைத்து - முன் மருந்து பூசின அரிதாரக் கட்டியை வெயிலிலுலர்த்தி, கனபுரசம் பட்டை அதின் சாம்பற்கு உள் நீ வசம் இட்டு - முற்றிய முருக்க மரப் பட்டைச் சாம்பலை (ஒருகுடுவையிற் போட்டு) அதின் மத்தியில் வசப்படும்படி மாணுக்கனுகிய நீ வைத்து, ஏழு மண் சீலை செய்து-(மேற்சட்டி மூடி) ஏழு மண் சீலை செய்து, நிலவரமாய் - சரியாய், அடுப்பேற்றி- அடுப்பிலிட்டு, முத்தீ நினைவாய் இட்டு - தீபாக்கினி, கமலாக்கினி, காடாக்கினி என்னும் மூன்று தீக்களை

மறவாமற் போட்டு, திவசம் நால் சாமம் எரிக்க - ஒரு பகலிலுள்ள நான்கு சாமம் என்று சொல்லப் பட்ட பன்னிரண்டு மணி நேரம் எரித்தால், சிவசிவா-மங்கலமாக, அரியினது தேவி நாதம் நீறும்-அரிதார மானது பற்பமாம், தவசி கட்டவேண்டும் அல்லால் உலகத்தாரோ-தவவன்மையாளர்களே இவ்வரிதாரத் தைக் கட்டுவார்களல்லது உலகத்தார்களா கட்டு வார்கள்? முடியாது, க்ஷயரோகம் சுரரோகம் தாம்காணு - (இதையுண்டால்) க்ஷயரோகம், சுரரோ கம் ஆகிய இவைகள் காணப்படா (இல்லாமற்போய் விடுவனவாம்.)

தீயின் விவரம் முன்னர்க் கூறப்பட்டது. ஏகா ரங்கள் உம்மை அசைகள். திவசம், தீ வசம் எனப் பிரிக்க. திவசம் - நாள். (௩௪)

காணவே யரிதார பற்பந் தன்னைக்
கனமான திரிகடுகு தேனி லுண்டால்
நாணுமே சுரமீளை கிரந்தி குட்டம்
நலமில்லாப் பிரசங்கள் விடநீ ரெல்லாம்
கோணுமே புகையிலையும் புளியுந் தள்ளிக்
கொண்டபின்பு தலைமுழுகிக் கூட்டி யுண்ணே
ஊணவே சுரங்களுக்கும் மாற லுக்கு
முருண்டைசுர கோடரிவிண் டுரைக்கக் கேளாய்.

கருத்து:—இச்செய்யுள் அரிதார பற்பத்துக்கு அநுபானமும்) துணைமருந்தும், தீரும் நோய்களும்

பத்தியமும், சுரகோடரி சொல்லுவேன் என்பதை யுஞ் சொல்லுகின்றது.

சொ - ள்:—அரிதார பற்பந் தன்னைக்காண - முன் முடிந்த அரிதார பற்பத்தைப் பார்த்து, கன மான - உயர்ந்த, திரிகடுகு தேனில் உண்டால் - திரி கடுகின் சூரணத்தொடு கலந்தாவது தேனில் இழைத் தாவது தின்றால், சுரம் ஈளை கிரந்திகுட்டம் நாணும் - சுரமும், ஈளையும், கிரந்தியும், குஷ்டமும் வெட்கும், நலம் இல்லாத பிநசங்கள்விட நீர் எல்லாம் கோணும்- நன்மையில்லாத பிநசங்கள் விடநீர்கள் இவைகளெல் லாம் நீங்கும், புகையிலையும் புளியும் தள்ளி - புகை பிடித்தலையும், புளியையும் நீக்கி, கொண்டபின்பு - மருந்து சாப்பிட்ட பின்னர், தலைமுழுகி - எண்ணெய் தேய்த்துக் கொண்டபிறகு, கூட்டி உண் - மேற்படி புகையிலை பிடித்தலையும், புளியையும் சேர்த்துச் சாப் பிடுவாய்.

(இனிச்) சுரங்களுக்கும், மாறலுக்கும் ஊண விடாச் சுரங்களுக்கும் விட்டு விட்டுக்காயும் மாறல் சுரங்களுக்கும் நன்றாய்க் கேட்குமாறு, சுரகோடரி உருண்டை - சுரகோடரி என்னும் மாத்திரையை விண்டுரைக்கக் கேளாய் - நன்றாய் எடுத்துச் சொல் லக் கேட்பாயாக.

ஏகாரங்கள் அசை. ஊணல் - ஊன்றலின் திரிவு.(நடு)

## சுரகோடரி மாத்திரை

விண்ணிலே போனவுயிர் மீளு மீளும்
வெள்ளையொன்று சூதமொன்று கௌரி யொன்று
தண்ணீரே மிளகுடனே சேர்த்த வித்துச்
சார்மத்தஞ் சாற்றுலுங் கொம்பின் பாக
லெண்ணியே நாற்சாம மரைத்து மூந்தி
னெடைகட்டிக் காயவைத் தெடுத்துக் கொண்டு
நண்ணியே மோர்காடி யிளநீர் வெந்நீர்
நாட்டிலு லுளொன்றிற் சுரநா டாதே.

கருத்து:—இச்செய்யுள் சுரகோடரி மாத்திரை செய்யும் வழியையும், துணைமருந்தையும், தீரு நோய்களையும் கூறுகின்றது.

சொ - ள்:—வெள்ளை ஒன்று சூதம் ஒன்று கௌரி ஒன்று - சுத்திசெய்த வெள்ளைப் பாடாணம், இரசம், கௌரிபாடாணம் ஆகிய மூன்றும் வகை ஒன்றுக்கு ஒரு எடையும் ஆகிய மூன்றெடையையும், மிளகு உடன் - மிளகு (மூன்று எடை) யுடன், தண்ணீர் சேர்த்து அவித்து - தண்ணீர் சேர்த்து வேகவைத்து, சார் - பொருந்திய, மத்தம் சாற்றுலும் கொம்பின் பாகல் சாற்றுலும் - ஊமத்தயிலைச் சாற்றுலும் கொம்புப் பாகலிலைச்சாற்றுலும், நால் சாமம் எண்ணி அரைத்து - வகைக்கு நான்குசாமம் வரைக்கும் கணக்கிட்டு அரைத்து, உழுந்தின் எடை கட்டி - உழுந்தளவு மாத்திரை யுருட்டி, காயவைத்து - நிழலில் உலர்த்தி, எடுத்துக்கொண்டு - எடுத்துப்

புட்டியில் வைத்துக்கொண்டு, மோர் காடி இளநீர் வெந்நீர் நண்ணி நாட்டினல் - மோரிலாவது, காடியி லாவது, இளநீரிலாவது, வெந்நீரிலாவது வேளைக்கு ஒரு மாத்திரை* மனத்திற்கொண்டிழைத்துக் கொடுத் தால், சுரம் நாள் ஒன்றில் நாடாது - எவ்வகைச்சுர மும் ஒரே நாளில் தீரும் உடம்பை நாடி வராது, விண்ணில்போன உயிர் மீளும் மீளும் - ஆகாயபூதத் திற் கலந்தகன்ற உயிரும் மறுபடியும் உடலில் விரை வில் வந்து சேரும்.

ஏகாரங்கள் அசைகள். (நகூ)

நாடாது மாத்திரையி லெவைபெரிய வென்றல்
நவரத்ன பூபதிசிந் தாமணிசஞ் சீவி
வாடாத பக்ரதியா மக்கினிகு மாரி
வாதராட் சசன்காம கேசரியா னந்தன்
ஊடான விவைமெல்லா மறுநூற் றுக்குள்
உரைத்திட்டே னின்னம்வெகு வுசிதமெல் லாமும்
பாடாம லிருக்கவில்லை நூல்கடோ றும்
பார்த்தறிந்தாற் பண்டிதமும் பலிக்குந் தானே.

கருத்து :—இச்செய்யுள் உயர்ந்த மாத்திரை கள் இவையென்றும், அவை இன்ன நூலில் சொல் லப்பட்டிருக்கின்றனவென்றும், நூல்களை நன்கு ஆராயவேண்டுமென்றுஞ் சொல்லுகின்றது.

சொ - ள் :—நாடாது-சுரவகை நாடாது, மாத் திரையில் - நான் சொன்ன மாத்திரைகளில், எவை

பெரியவை என்றால் - எந்த மாத்திரைகள் பெரியவை கள் என்று கேட்டால், நவரத்ன பூபதி சிந்தாமணி சஞ்சீவி வாடாத பகீரதியாம் அக்கினிகுமாரி வாத ராட்சசன் காமகேசரி ஆனந்தன் - நவரத்னபூபதி செந்தூரமும், சிந்தாமணி மாத்திரை சஞ்சீவிமாத் திரை இளகாத பகீரதி யக்கினிகுமாரி மாத்திரை வாதராட்சச மாத்திரை காமகேசரி மாத்திரை ஆனந்தவயிரவ மாத்திரையாகிய ஒரு செந்தூரமும் ஆறுமாத்திரையுமாம், ஊடு ஆன - நோயில் ஊடுரு விச் சென்று நீக்கக் கூடியவைகளான, இவை எல் லாம் - இம்மாத்திரைகளை எல்லாமும், இன்னம் வெகு உசிதம் எல்லாமும்-இன்னும் பல உயர்ந்த முறைகளை யெல்லாமும், அறுநூற்றுக்குள் உரைத்திட்டேன் - பாண்டவைப்பு அறுநூற்றிற் சொல்லிவைத்தேன், பாடாமல் இருக்க இல்லை - நூல்கள் பாடாமலிருக்க வில்லை, நூல்கள்தோறும் பார்த்து அறிந்தால் பலிக் கும் - பலநூல்களையும் ஆராய்ந்தறிந்து அவற்றிற் சொல்லியபடி செய்தால் மருத்துவங் கைகூடும்.

பாண்டவைப்பு அறுநூற்றில் 'நவரத்னபூபதி மாத்திரை' ஒன்று சொல்லப்படாமையால், அதை மாத்திரையுடன் சேர்த்துக் கூறியது 'சுருங்கச்சொல் லல்' என்னும் அழகுபற்றியென் றறிக.

அது நவரத்ன பூபதி செந்தூரம் என்றும், நவ ரத்னபூபதி மாத்திரை யென்றும் வழங்கப்படும் ஆயின், பாண்டவைப்பு அறுநூற்றில்,

மாத்திரைதா னறுவித முண்டு கேளாய்
மக்களே யறுநூற்றில் வலுத்தான் மெத்த
சாற்றுகிறேன் சிந்தாமணி மாத்திரைதா னென்று
சக்ரபாணி பகிரதிமாத் திரையொவ் வொன்றும்
ஆற்றுகிறேன் வியாதிகளை யண்டொட் டாத
ஆனந்த வயிரவனு மடங்காச்சஞ் சீவி
வாழ்த்துகிறேன் வாதராட் சசனோ டாறும்
மகத்தான குளிகைகளா மருந்து போதும்"
போதுமப்பா விவையாறும் பூபதி செந்தூரம்
பூரணமாஞ் சந்திரனும் தங்கத்தோடும்"

என்று பூபதியைச் செந்தூரமென்று கூறுகின்றது. ஆகையால் பூபதி செந்தூரமென்று எழுதப்பட்டது. நவரத்ன பூபதி என்றது 'சர்வ பூபதி மாத்திரை' போலும்.

ஊடுதல் - ஊடுருவிச் செல்லல். (௩எ)

---

## மருத்துவனுக்கு அறிவு புகட்டல்

பலிப்பதற்கு வியாதியுள்ளோர் தேகக் கூறும்
பருத்தவுடன் மெலிந்தவுட னேயின் கூறும்
சலிப்பில்லா மலக்கூறுஞ் சலத்தின் கூறும்
சாத்தியமோ டசாத்தியநோய் தத்துவக் கூறும்
வலிப்பில்லா மனக்கூறு நித்திரையின் கூறும்
மங்கையர்மே லாசைகொள்ளு மயக்கக் கூறும்
பலிப்பில்லாத் தர்மகன்ம நாட்டக் கூறும்
பார்த்தறிந்து பிறகுபார் மருந்தின் கூறே.

கருத்து:—இச்செய்யுள் மருத்துவனுக்கு அறிவு புகட்டல் கூறுகின்றது.

சொ - ள்:—பலிப்பதற்கு-மருந்து பலிப்பதற்கு வியாதியுள்ளோர் தேகக்கூறும் - நோயுள்ளவர்களது உடற் கூற்றையும், பருத்தவுடல் மெலிந்த உடல் நோயின் கூறும் - தூலித்தவுடல் நுண்ணிய உடல்களின் மாறுதலான நோய்களின் கூற்றையும், சலிப்பு இல்லா - வெறுப்பில்லாமல் அடிக்கடி இறங்கிக் கொண்டிருக்கிற, மலக்கூறும் சலத்தின் கூறும் - மலக்கூற்றையும் நீரின் கூற்றையும், சாத்தியமோடு அசாத்திய நோய் - தீருநோய் தீராநோய்க் கூறுபாடுகளையும், தத்துவக்கூறும்-தத்துவங்களின் கூறுகளையும், வலிப்பு இல்லா மனக் கூறும் - வன்மையில்லாத மனத்தின் கூற்றையும். நித்திரையின் கூறும் - தூக்கத்தின் கூற்றையும், மங்கையர்மேல் ஆசைகொள்ளும் மயக்கக் கூறும் - பெண்கள்மேல் அவா கொள்ளும் மயக்கக் கூற்றையும், பலிப்பு இல்லா - கைகூடாத, தர்மம் கன்மம் நாட்டக் கூறும் - தர்ம நோக்கக் கூற்றையும், கர்ம நோக்கக் கூற்றையும், பார்த்தறிந்து - நன்குணர்ந்து, பிறகு மருந்தின் கூறுபார் - பின்னரே கொடுக்க வேண்டிய மருந்து எதுவென்று அதன் பிரிவை யுணர்வாய். ஏகாரம் அசை. (௩அ)

கூர்பாரு தூதலட் சணமும் பாரு
கோள்பாரு நாள்பாரு குணமும் பாரு
நேர்பாரு தேகபே தங்கள் பாரு
நிலைபாரு கிரகவுச்ச நீசம் பாரு

பேர்பாரு கையைநீ பிறகு பாரு
பெற்றதிலே கிரகத்தின் றன்மை பாரு
வேர்பாரு தழைபாரு மிஞ்சி னக்கால்
மெல்லமெல்லப் பற்பசெந் தூரம் பாரே.

கருத்து:—இச் செய்யுளும் மருத்துவனுக்கு அறிவு புகட்டல் கூறுகின்றது.

சொ - ள்:—கூர்பார்-முன்னர் சொன்னவைகளை யெல்லாம் கூர்ந்து பார், தூதலட்சணமும் பார் - (வயித்தியனை யழைக்க வருபவனாகிய) தூதனுடைய குறிகளைப் பார், கோள் பார் - நோயாளியின் கொள் கைகளைப் பார், நாள் பார்-நோயாளி நோய்கொண்ட நட்சத்திரத்தையும் அவன் (வயித்தியனிடத்தில் மருந் துண்ணவந்த) நட்சத்திரத்தையும் பார், குணமும் பார் - அந்நாள்களின் நன்மை தீமைகளைப் பார், நேர் பார்-மருந்துக்குத் தகுதியான நோயைப் பார், தேக பேதங்கள் பார் - வாததேகம், பித்ததேகம், சீதள தேகம், தொந்த தேகம் என்பவற்றைப் பார், கிரக நிலைபார் - கிரகங்கள் நிற்கும் நிலைகளைப் பார், உச்ச நீசம் பார் - உச்ச கிரகங்கள் நீச கிரகங்களைப் பார், பேர்பார் - பேர் ராசி பார், பிறகு நீ கையை பார் - பின்னர் நீ நாடிப் போக் கைப் பார், பெற்றதில்-அப்படிக் கைபார்த்துக்கண்ட நோய்களுக்குத் தக்கதாவென்று, கிரகத்தின் தன்மை பார் - அவன் இருப்பிடத்தின் குணத்தைப் பார், (பின்னர்) வேர்பார் தழைபார் - மூலிகைகளாலாகிய

மருந்துகளைக் கொடுத்துப் பார், மிஞ்சினக்கால் - அவற்றிற்கு அடங்காமல் நோய்கள் மிஞ்சினால், மெல்ல மெல்ல - மெதுவாக, பற்பம் செந்தூரம் பார் - பஸ்பங்களாலும் செந்தூரங்களாலும் வைத்தியஞ்செய்.

உகரங்கள் சாரியை. ஏகாரங்கள் அசைகள். நேர் - தகுதி.

தூதலட்சணம் என்பது ஒரு நூல். அதில் அவன் லட்சணங் கூறப்பட்டிருக்கிறது.

தேகபேதங்களை 'எண்வகை ஆராய்ச்சி' என்னும் நூலிலும், நட்சத்திர குணாகுணங்களைச் 'சித்தர் நாண்மாலை' என்னும் நூலிலுங் காண்க. (ருகூ)

பாரப்பா வுலகத்தி லெளியோ ருண்டு
பணக்கார ருண்டுபா சாண்டி யுண்டு
தாரப்பார் தராதரங்கண் டறிந்து செய்யிற்
றர்மம்வரு மதனாலே கீர்த்தி யுண்டாம்
கூரப்பா யார்கபடஞ் செய்திட் டாலுங்
கொடுக்கின்ற மருந்துகளிற் கபடம் வேண்டாம்
சீரப்பாங் கிருபைவைத்து மருந்தை யீந்தாற்
செய்தகன்ம மவரவரைச் சேருந்தானே.

கருத்து:—இச்செய்யுளும் மருத்துவனுக்கு அறிவு புகட்டல் கூறுகின்றது.

சொ - ள்:—அப்பால் - இவைகளை யெல்லாம் உணர்ந்தபின்னரும், பார் உலகத்தில் - இந்நிலவுலகத்

தில், எளியோர் உண்டு - ஏழைகள் இருக்கிறார்கள், பணக்காரர் உண்டு - செல்வவான்கள் இருக்கிறார்கள், பாசாண்டி உண்டு - பாசாண்டிகள் இருக்கிறார்கள், தாரப்பார் - இவர்களின் ஏற்றத் தாழ்வுகளை வரிசை யாக உணர்தலுற்று, தராதரம் கண்டறிந்து செய் யில் - இவர்களில் பணங்கொடுப்பவர்கள் கொடாத வர்கள் முதலிய மாறுதல்கள் உணர்ந்து வயித்தியஞ் செய்தால், தர்மம் வரும் - புண்ணியமுண்டாகும், அதனால் - அப்புண்ணியத்தினால், கீர்த்தி உண்டாம் - புகழ் உண்டாகும், கூர் அப்பா கபடம் - தெளிவில் லாத கபடத்தை, யார் செய்திட்டாலும் - இம்மூவர் களில் எவர்கள் செய்தாலும், கொடுக்கின்ற மருந்து களில் கபடம் வேண்டாம் - நீ கொடுக்கின்ற மருந்து களில் கபடம் வைத்து ஒன்றுக் கொன்று கொடா மல் நோய்க்குத் தக்க மருந்துகள் கொடுக்கவேண் டும், கிருபை வைத்து மருந்தை ஈந்தால் - அப்படி நீ நோயாளி மீது அன்பு வைத்து மருந்து கொடுத் தால், சீர் அப்பு ஆம் - சீர்த்தியானது வந்து உன்னைச் சேரும், (அப்போது) செய்த கன்மம் - அவரவர்கள் செய்த கர்மங்கள், அவர் அவரை சேரும் - அவரவர் களையே சேர்ந்து வருத்தும்.

ஏகாரங்களும் தானும் அசைகள். தார் - வரிசை. கூர் - கூர்மை என்பதன் குறை. அப்புதல் இரண்டும்- பொருந்தல்.

**அவரவர்கள் செய்த கர்மம் என்பது செல்வம் இருந்தும் வயித்தியனுக்குக் கொடாமை முதலியன.**

அங்ஙனம் கொடாதவர்கள் கர்மத்தை,

"வஞ்சமற்று ரென்றபிணி யாளர் தம்மை
மகவதினும் பதின்மடங்கு மருந்து செய்ய
நெஞ்சினோ யாளியின் பிணிநி தானம்
நிறுத்துமந்த வயித்தியர்க்கு நிதிகொ டாமல்
பஞ்சைமொழி பகருமரும் பாவி யோரைப்
பாழ்நரகி லழுத்தியெமன் பாசத் தாலே
அஞ்சவிழுத் தேயடித்துத் தள்ளு வானென்
றகத்தியரு முன்னூலி லருள்செய் தாரே."

என வயித்தியசாரங் கூறுவதாலும்,

"முழுதுந்தீர்த்த
வேதியர் தமையுளாத விலங்கின ரினமு ேனயினுற்புத்தி
ராதியோடே நாளுக்கு நாட்டேய் வுற்று
நமபுரத் தேகுவார் போல்"

எனத் தேரர் கூறுவதாலும்,

நோய் முதலியன நன்குணரா வயித்தியன் கர்மத்தை,

"வாகடத்தின் பயனறியார் நாடி காணார்
வளர்கையைப் பிடித்திழுத்து வார்த்தை சொல்வார்
ஆகடிய மாகவே நல்லோர் தம்மை
யசாத்தியநோ யோரென்றே யறைந்து போவார்
பேர்கிடக்கப் பேர்சொல்வார் வியாதி கட்குப்
பிணிதீர்ப்போ மென்றுசொல்வார் தீர்க்க மாட்டார்
ஓகோவிவ் வைத்தியர்தா மென்று சொல்வார்க்
கொருக்காலு மோட்சமில்லை நரகந் தானே.

அச்சமற வயித்தியரே நோயுள் ளோர்கட்
 கசாத்தியமுஞ் சாத்தியமு மறிந்து நன்றாய்ப்
பட்சமறக் குறிகுணமெய்ப் பரீட்சை பார்த்துப்
 பரிகார மாய்மருந்து பகரா ராகில்
தச்சமறக் கிளைகுலங்கள் வேரோ டற்றுத்
 தரணிதனின் வெகுபாவந் தலையின் மேற்கொண்
டிச்சைபெற வெழுநரகி லழுந்திப் பின்னும்
 ஈடேற்ற மில்லாம லிருப்பார் தாமே."

என வயித்திய சாரம் கூறுவதாலுமறிக. (சஎ)

தானென்ற நோயாலே யெடுத்த தேகந்
 தன்னியலு நன்மார்க்க வுயிருக் காச்சு
பேனென்ற சிலேத்துமமும் வாதம் பித்தம்
 பிடரிவழி யாயிறங்கிக் கரத்தி னித்தம்
ஊனென்ற நாடியென்ன வொன்றே யொன்றே
 ஒன்றலவோ மூன்றாகி யநேக மாச்சு
நானென்ற வெழுதாது தொந்த மாச்சு
 நன்றான நாடியெல்லாந் தெளித னன்றே.

கருத்து:—இச் செய்யுள் மருத்துவன் இவைகளை உணர வேண்டு மென்பது கூறுகின்றது.

சொ - ள்:—தான் என்ற - நான் என்ற ஆணவத்தால் வந்த, நோயால் - கர்ம நோயால், எடுத்த தேகம் தன் இயல் - எடுக்கப்பட்ட உடம்பின் தன்மை, நன்மார்க்க உயிருக்கும் ஆச்சு-நல்ல வழியிலிருக்கும் உயிருக்கும் ஆச்சு, பேன் என்ற சிலேத்துமமும் வாதம் பித்தம் - ஆதலின் நீராயுள்ள சிலேத்தும

மும், காற்ருயுள்ள வாதமும், நெருப்பாயுள்ள பித்த மும், பிடரி வழியாய் இறங்கி-தலைவழியாய் இறங்கி; கரத்தில் நித்தம்-கையில் அணுரூபமான நித்தவடிவா யிருக்கும், ஊன் என்ற-(இவைகள் இவ்வாறிருக்க,) இவ் வுடலில் இவற்றிற்கு அந்நியோநந்நிய பாவமா யிருக்கப் பட்டதென்று சொல்லப்பட்ட, நாடி - ஆன் மாவின் நடுவு நிலைமை, என்ன - என்று, ஒன்றே ஒன்றே - ஒன்றே நாடியாம், ஒன்று அல்லவோ - இந்த ஒரு நாடியே யல்லவா, மூன்ருகி - வாத பித்த, சேத்மங்களை உணர்த்துங்கால் மூன்ருய், அநேகம் ஆச்சு - தன் வியாபகத்தால் பலவாயின, நான் என்ற - நான் இவ்வாறென்று சொன்ன, எழுதாது தொந்தம் ஆச்சு - ஏழு தாதுக்களிலும் கலந்தது, (ஆகையால்) நன்று ஆன-(உடலிலுள்ள நோய்களின் குணு குணங்களை உள்ளபடி யுணர்த்தலினல்) நன்மை யுடையதான, நாடி எல்லாந் தெளிதல் நன்று - நாடி களின் மர்மங்களை யெல்லாம் நன் குணர்தல் நன் மையை விளைவிப்பதாம்.

ஆன்ம இயக்கம் ஒன்றே பலப்பல வழியாக உணர்த்தப் படுவதென்பார், இங்ஙனம் கூறினர்.

தானெனல் - ஆணவங் கொள்ளல். பேனம் - நுரை. நீரின் மேற்று. ஊன் - உடல். (சுக)

தெளிந்துபார் நாடிதா ரணையின் போக்குஞ்
  செப்பரிய நோய்ப்போக்குஞ் சடத்தின் போக்கும்
மொழிந்தபதி ஞயிரத்திற் சொன்னே னன்ருய்
  மூன்றுவித கன்மகாண் டங்கள் சொன்னேன்



பொழிந்திட்ட மணிநாலா யிரவெண் பாவிற்
போக்கொன்றுந் தப்பாது பூரா யங்கள்
தெளிந்துகொள்ள முன்னமொரு வெண்ப துண்டு
சிவசிவா விந்தநூ றெளிவு தானே.

கருத்து:—இச்செய்யுள் நாடி வழியும், நோய் விவர முதலியவும் இன்னின்ன நூல்களிற் சொல்லப் பட்டிருக்கின்றனவென்று கூறுகின்றது.

சொ - ள்:—நாடி தாரணையின் போக்கும் - நாடி நடக்கும் வழியையும், செப்பரிய நோய் போக்கும் - சொல்லுதற்கரிய நோய்களின் வழியையும், சடத் தின் போக்கும் - உடம்பின் வழியையும், மொழிந்த பதினாயிரத்தில் நன்றாய்ச் சொன்னேன் - பதினாயிரம் பாடல்களாகப் பாடப்பட்ட நூலில் நன்றாய்ச் சொன் னேன், தெளிந்து பார் - (இவைகளின் வழிகளை அந்த நூலில்) தேர்ந்து பார், மூன்றுவித் கன்ம காண்டங்கள் சொன்னேன் - கர்ம வேறு பாடுகளை மூன்றுவகை நூல்களாகச் சொன்னேன், மணிநாலா யிர வெண்பாவில் - வெண்பாவாற் சொல்லப்பட்ட மணி நாலாயிரத்தில், பொழிந்திட்ட பூராயங்கள் போக்கொன்றும் தப்பாது - சொன்ன பழமையான வழிகளில் ஒன்றுந் தப்பாகாது, தெளிந்துகொள்ள - நன்றாய்த் தெரிந்துகொள்ள, முன்னம் ஒரு எண்பது உண்டு - இதற்கு முன்னதாகிய ஒரு எண்பது பாடல் களாலாகிய ஒருநூல் உண்டு, இந்த நூல் - இந்தப் பின் எண்பதென்னும் நூலானது, தெளிவு தான் - அந்நூலின் தெளிவே யாகும்.

ஏகாரம் அசை. சிவசிவா என்பது மங்கலக் குறிப்பு. பொழிதல் - மிகச் சொல்லல். (சஉ)

தானென்ற வெண்பதிலே வழலை மார்க்கஞ்
சாதகமாய்ச் சவர்க்காரத் தெண்ணெய் வாங்கல்
வேணென்று கருக்குருவும் வெளியாய்ச்சொன்னேன்
வெட்டவெளி யாகுமிந்த நூலைப் பார்த்தால்
கோனென்ற ரிஷிதேவர் முனிவர் சித்தர்
கூடியே பொதியில்வந் திருக்கும் போதில்
ஏனென்ற சாத்திரங்க ளெல்லாம் பார்த்தே
யெண்பதையு மறைத்துவிட்டா ரெனைக்கா ணதே.

கருத்து:—இச் செய்யுள் இந்நூலில் இன்னதைச் சிறப்பாகச் சொன்னேன் என்பதையும், அதை மறைத்த விதத்தையும் சொல்லுகின்றது.

சொ - ள்:—தான் என்ற - தனக்குத் தானே ஒப்பென்று சொல்லப்பட்ட, எண்பதில் - இவ் வெண் பதில், வழலை மார்க்கம் - முப்பூ முடிக்கும் வழியை யும், சவர்க்காரத்து எண்ணெய் வாங்கல் - சவர்க் காரத்திலிருந்து எண்ணெய் வாங்கும் வழியையும், கருகுருவும் - அதற்குக் காரணத்தையும், வேண் என்று சாதகமாய் வெளியாய் சொன்னேன்-வேண்டு மென்று கைவழக்கமாய்ச் செய்து முடிக்கும் வழியை வெளிப்படையாகச் சொன்னேன், இந்த நூலைப் பார்த்தால்-(ஆகையால்) இந்த நூலை நன்றாய் ஆராய்ந் தால், வெட்டவெளி ஆகும் - (அவைகள்) நன்றாய்த் தெரியும், கோன் என்ற - தலைவர்களென்று சொல்

லப்பட்ட, ரிஷி தேவர் முனிவர் சித்தர் - ரிஷிகளும் தேவர்களும் முனிவர்களும் சித்தர்களும், கூடி - ஒன்ருய்ச் சேர்ந்து, பொதியில் வந்து இருக்கும் போதில் - பொதியில் மலையில் வந்திருந்த காலத்தில், ஏண் என்ற - பலமுள்ள, சாத்திரங்கள் எல்லாம் பார்த்து - எல்லா நூல்களையு மாராய்ந்து, என்னைக் காணுது - எனக்குத் தெரியா வண்ணம், எண்பதை மறைத்து விட்டார், இந்த நூலை மறைத்து விட்டார்கள்.

ஏகாரங்கள் உம்மை அசைகள். தானெனல் - தனக்கு ஒப்பெனல். கோ - தலைவன், னகரச்சாரியை பெற்றது கோன். ஏண் - வன்மை. வேண் வேண்டு மென்பதின் குறை. (சங)

காணுதே போகாமல் வழலைச் சுண்ணக்
கருவழியு மாயிரத் திருநூறு பாரு
தோணுமற் சட்டைமுனி நூறின் மார்க்கம்
சுற்றுமிக வகைதெரியச் சொன்னு ரில்லை
பூணுது நந்தீசர் வெளியாய்ச் சொன்னுர்
புதைத்தார்கண் மூலவர்க்கப் பிள்ளை யெல்லாம்
வீணுகச் சொல்லவில்லை மச்ச கேந்திரா
வெடியுப்புச் சேர்க்கும்வகை விளம்பி ளுரே.

கருத்து:—இச்செய்யுள் முப்புச் சுண்ணத்திற்கு வழி சொன்னவர்களின் மாறுபாடுகளைக் கூறுகின்றது.

சொ - ள்:—வழலைச் சுண்ணம் - முப்புச் சுண்ண மானது, காணுது போகாமல் - தெரியாமற் போகாத

படி, கருவழியும் - அதுசெய்து முடிக்கும் முதல்வழி யையும், ஆயிரத்து இருநூறு பார் - ஆயிரத்திருநூ றென்னும் நூலிற்பார், சட்டை முனிநூறில் - சட்டை முனிவர் செய்த நூற்றில், மார்க்கம் தோணுமல் - வழி தெரியாதபடி, சுற்று மிக - மிகவும் சுற்ருய், வகை தெரியச் சொன்னூர் இல்லை - நன்ருய்ச் செய் யும் வகை தெரியும்படி சொல்லவில்லை, நந்தீசர் - நந் தீஸ்வரரானவர், பூணுது - மாட்டெறியாமல், வெளி யாய்ச் சொன்னூர் - வெளிப்படையாய்ச் சொன்னூர், மூலவர்க்கப் பிள்ளையெல்லாம் - திருமூலர் வர்க்கத் தில் வந்த மாணவர்களெல்லாரும், புதைத்தார்கள் - விளங்கச் சொல்லாமல் மறைத்துச் சொன்னூர்கள், மச்சகேந்திரா - மச்சகேந்திரனென்னும் மாணுக் கனே! வீணுகச்சொல்ல இல்லை-வீணுக நூல் சொல்ல வில்லை, வெடியுப்பு சேர்க்கும் வகை விளம்பினூர் - வெடியுப்பை அத்துடன் சேர்க்கும் வகையை நன் ருய்ச் சொன்னூர்.

ஏகாரங்கள் அசைகள். தோணுமல், தோன்ரு மல் என்பதன் திரிவு. பூணல் - (ஒன்றி லொன்று) தொடுத்தல்.

முப்பு முடிக்கும் வழிகள் இந்நூலிற் 'சுருங்கச் சொல்லல்' என்னும் விதிபற்றிக் கூறினர்போலும். அதை முடிந்தநூலில் கண்டு கொள்க. (சச)

## க்ஷயரோக வரலாறு

விளம்பினல் க்ஷயரோகம் வரூஉ மார்க்கம்
விசையாக மூலத்திற் சூடு கொண்டு
தளும்பியே கபாலத்தின் முட்டிச் சாடித்
தாதுவெல்லாங் கலகலத்தி ரத்தம் வற்றி
உளம்பியே நீரேறிச் சுரமுந் தோன்றி
உளைச்சலொடு பிரமேகநாக் குருசி யற்றுக்
கிளம்பியே யெட்டுவகை க்ஷயங்க ளாகிக்
கிழாறு கொண்டுவிடு மிளைப்புத் தானே.

கருத்து:—இச்செய்யுள் க்ஷயரோகம் வருவதற்கு வழியும், அதன் கிளை நோய்களும் அது பெறும் பேரும் கூறுகின்றது.

சொ - ள் :— க்ஷயரோகம் வரூஉம் மார்க்கம் விளம்பினல் - க்ஷயரோகம் வரும் வழியைச் சொல்லுமிடத்து, மூலத்தில் விசையாகச் சூடுகொண்டு-மூலாதாரம் என்னும் மலவழியில் வேகமாய்ச்சூடுண்டாகி, தளும்பி - (அச்சூடு) மேனுக்குக் கிளம்பி, கபாலத்தில் முட்டிச்சாடி - தலையோட்டில் தாக்கி மோதி, தாது எல்லாம் கலகலத்து - நரம்புகளும் சத்த தாதுக்களும் தளர்ந்து, இரத்தம் வற்றி - அவ்வேழு தாதுக்களில் ஒன்றான இரத்தம் வரண்டு, உளம்பி - குழம்பி, நீர் ஏறி - நீராய் ஏறி, சுரம் தோன்றி-காய்ச்சல் உண்டாய், உளைச்சல் ஒடு - உடல் குடைச்சலுடன், பிரமேகம் - பிரமேக நோயு முண்டாய், நாக்கு உருசி அற்று - நாவினுக் குள்ள உருசி யுணரு

முணர்வற்று, ிளம்பி - (இவ்வகை நோய்களெல்லாம் துணையாக) வெளிப்பட்டு, எட்டுவகை க்ஷயங்கள் ஆகி - எட்டுவிதமான க்ஷய நோய்களாகி, கீழ் ஆறு கொண்டுவிடும் - கீழ் வழியிற் கொண்டுபோய் விடும் (இளைக்கும் வழியிற் கொண்டுபோய்ச் சேர்க்கும்), இளைப்புத் தான் - (ஆகையால் இந்நோய்) இளைப்பு நோய் என்ற பேருள்ளதேயாம்.

இளைப்பு நோய் என்றது இளைப்பிருமலே. உளம்பி என்றது உழம்பி என்பதன் வழக்கு. நாக்கு என்பது நான்காம் வேற்றுமை. நாவுக்கு என்பது பொருள்.

ஏகாரங்கள் நான்கும் அசைகள். உம் சாரியை. தளும்பல் - மேற் கிளம்பல். உழம்பல் - குழம்பல். ()

---

## க்ஷயகுலாந்தக செந்தூரம்

இளைப்பான ரோகமது தீர வென்றால்
இயம்புவேன் க்ஷயகுலாந் தகசெந் தூரம்
பிழைப்பாக வாயிரத்தைந் நூற்றிற் சொன்ன
பேச்சல்ல விந்தமுறை பேணிப் பாரு
உளைப்பான மால்தேவி பலம தொன்று
முற்றவெண் பூசினிக்காய் நீரிற் காய்ச்சித்
திளைப்பான தோளேந்திர மாகத் தூக்கிச்
செங்கிளுவைச் சாற்றினிலுஞ் சுத்தி செய்யே.

க்ருத்து:—இச்செய்யுள் க்ஷயகுலாந்தக செந்தூரம் செய்யும் வழியைக் கூறுகின்றது.

சொ - ள்:—இளைப்பு ஆன ரோகம் அதுதீர என்றால் - (க்ஷயரோகம் என்ற) இளைப்பிருமல் நோய் தீர வேண்டுமென்றால், க்ஷயகுலாந்தக செந்தூரம் இயம்புவேன் - (அதற்கு - க்ஷய நோய்களாகிய குலங்களை யொழிப்பதற்கு எமனையொத்த) க்ஷயகுலாந்தக செந்தூரம் சொல்லுவேன், இந்த முறை ஆயிரத்து ஐந்நூற்றில் பிழைப்பாக சொன்னபேச்சு அல்ல - இந்தச் செந்தூர முறை ஆயிரத்தைந்நூ றென்னும் நூலில் குற்றமாகச் சொல்லப்பட்ட க்ஷயகுலாந்தக செந்தூர முறைபோன்றதல்ல, பேணி பார் (ஆகையால்) இதை நன்றாய்க் கவனித்துச் செய்துபார், உளைப்பு ஆன -(சுத்தி செய்யாவிட்டால்) வருத்தத்தை உண்டாக்குவதான, மால்தேவி பலம் ஒன்று ஆம்-தாளகம் ஒரு பலம் எடுத்து, உற்ற - அது சுத்தி செய்வதற்குத் தக்க, வெண் பூசினிக்காய் நீரில் - கலியாண பூசினிக்காயைத் தோல் சீவி அரிந்தும் இடித்தும் பிழிந்தெடுத்த சாற்றில், திளைப்பான தோளேந்திரம் ஆகத்தூக்கிக் காய்ச்சி - அழுந்தும் படியான தோளேந்திரமாகக் கட்டிக் கொதிக்கவைத்து, செம்கிளுவைச் சாற்றினிலும் சுத்திசெய் - சிவப்புக் கிளுவையிலைச் சாற்றினிலும் அவ்வாறே சுத்திசெய்.

பிழைப்பான எனப் பாடமாயின் பேச்சு என்பதோடு இயைத்துப் பொருள் கொள்க.

பிழைப்பு - குற்றம், பிழைத்தல்; உளைப்பு - வருத்தம்; திளைப்பு - அழுந்தல். ஏகாரம் அசை.

ஆயிரத்தைந்நூற்றிற் சொன்ன க்ஷயகுலாந்தக செந்தூரத்தை,

"பாடுகிறேன் சேத்துமந்தான் றெண்ணூற் றூறும்
பற்றறுக்க க்ஷயகுலாந் தகனைக் கேளாய்
போடுகிறேன் கடைசியிலே மைந்தா கேளாய்
புகலுகிறேன் கடுஞ்சுறுக்குப் புகழ்ந்து காணும்
நாடுகிறே னரிதாரம் பலம தொன்று
நலமான சிலாசத்தும் பலம தொன்று
நீடுகிறேன் செம்பருத்திச் சாற்றி னீயும்
நேராக மூன்றுநா ளாட்டி வாங்கே.

வாங்கியிதைக் குகையிலிட்டு மண்ணுஞ் செய்து
மண்கனத்த சிறுதாழி கொண்டு வந்து
வாங்கியே தமரிட்டு மணலைக் கொட்டி
மைந்தனே மணல்மேலே குகையை வைத்து
வாங்கியே மணல்கொட்டிச் சட்டி மூடி
வாகான வடுப்பிலே வைத்து நன்றாய்
வாங்கியே யேழுதினந் தீப வன்னி
மாட்டியே யாறவிட் டிறக்கிப் பாரே.

பார்க்கையிலே தேவிக்குப் பூசை செய்து
பார்க்களவி லேயிந்த்ர கோபம் போலாம்."

என்று உள்ளதாலறிக. (சகூ)

செய்திட்ட வரிதாரஞ் சமனுய்ப் பூரஞ்
சிலைகூட்டி யெருக்கின்பா றன்று லாட்டிக்
கொய்திட்ட குகையிலிட்டுப் புடத்தைப் போடு
கொடுமையெல்லாங்* தான்புகைந்து சாம்ப ராகும்
எய்திட்ட வவ்வெடைக்குப் பவழங் கன்று
ரிவைசேர்த்து முன்போலப் புடத்தைப் போடு
நைதிட்டு வெந்திடுமவ் வெடைக்கி லிங்கம்
நாலிலொன்று தங்கமரை கந்தி காலே.

கருத்து:—இச் செய்யுள் க்ஷயகுலாந்தக செந்தூரம் செய்யும் வழியின் தொடர்ச்சி கூறுகின்றது.

சொ - ள்:—செய்திட்ட-அவ்வாறு சுத்திசெய்து வைத்த, அரிதாரம் - தாளகம் (ஒரு பலமும்), பூரம் - இரச கர்ப்பூரமும், சிலை - மனோசிலையும், சமன் ஆய் கூட்டி - வகைக்கு ஒரு பலமாய்ச் சேர்த்து, (சேர்ந்த மூன்று பலத்தையும் கல்வத்திலிட்டு) எருக்கின்பாலால் ஆட்டி - எருக்கம் பாலாலரைத்து, காய்து இட்ட - மண்ணுற் செய்து வழித்துச் சுத்தி பண்ணின, குகையில் இட்டு - மூசையில் வைத்து, புடத்தைப் போடு-பத்தெருவிற்புடம் போடுவாய், கொடுமை யெல்லாம் புகைந்து சாம்பர் ஆகும் - (அப்படி போட்டால்) அம்மூன்று சரக்குகளின் தீச் செயலுள்ள பங்குகளெல்லாம் புகைந்து போய்ச் சாம்பலாகும், எய்து இட்ட - முன் சொல்லித் தீர்ந்த, அ எடைக்கு-அந்த ஒருபலம் வீதம், பவழம் கல்நார் - நற் பவழமும் கல் நாருமாகிய, இவை சேர்த்து - இவ்விரண்டு சரக்கு

(பா - ம்.) *குலமெல்லாம்.

களையும், (முன் சாம்பருடன்) சேர்த்து, முன்போலப் புடத்தைப்போடு - முன்புடம் போட்டதுபோல் (எருக்கம் பாலாலரைத்து மூசையிலிட்டு) பத்து எரு விற்புடம் போடுவாய், நைது இட்டு - மெலிந்து, வெந்து இடும் - வெந்துபோம், அவ் வெடைக்கு - அது இருக்கும் எடைக்கு, தங்கம் அரை - அரைப் பங்கு தங்கமும், இலிங்கம் நாலில் ஒன்று கந்தி கால் - இலிங்கமும் கந்தகமும் வகைக்குக் கால் எடை யாகும்.

தன், தான் இசை நிறை, ஏகாரம் அசை.

நைதல் - மெலிதல். (சஎ)

கால்கூட்டிக் காந்தமொரு பலமுஞ் சேர்த்துக்
கனமான குமரிநீர் முருக்கம் பூநீர்
சால்கூட்டிப் புடம்போடு செந்தூ ரிக்குந்
தளுக்கற்றுச் செந்தூரம் புடமைந் தாலுல்
வால்கூட்டிக் குழையிலே யடைத்துக் கொண்டு
வாகான திரிகடுகு தேனி லுண்ணப்
பால்கூட்டிப் பத்தியங்கொள் கறுத்தாட் டின்பால்
பத்துநாண் மருந் துண்ணப் பலிக்கு நன்றே.

கருத்து:—இச் செய்யுளும் க்ஷய குலாந்தக செந்தூரம் செய்யும் வழியின் தொடர்ச்சியும், துணை மருந்தும், நாளளவும், பத்தியமும் கூறுகின்றது.

சொ - ள்:—கால் கூட்டி - மேற்படி இரண்டு சரக்குகளையும் கால் எடையாகச் சேர்த்து, காந்தம்

ஒரு பலமும் சேர்த்து - காந்தம் ஒரு பலமும் கூடச் சேர்த்துக் கல்வத்திட்டு, கனம் ஆன - பெரிய மடலாய் முற்றியுள்ள, குமரி நீர் முருக்கம்பூ நீர் - கற்றாழைச் சாற்றையும் முருக்கம்பூச் சாற்றையும், சால்கூட்டி - மிகுதியுங் கலந்துகொண்டு, புடம்போடு (அரைத்துப் பில்லைதட்டி யுலர்த்தி அகலிலிட்டு மேல கல் மூடிச் சீலைமண் செய்து) புடம் போடுவாய், செந்தூரிக்கும் - (இவைகளெல்லாஞ் சேர்ந்து) செந்தூரமாகும், புடம் ஐந்து ஆனல் தனுக்கு அற்று செந்தூரம் - ஐந்து புடம் இவ்வாறு அரைத் தரைத்துப் போட்டால் தங்கத்தின் மின்னல் மறைந்து செந்தூரமாகும், வால் கூட்டி - (அச் செந்தூரத்துடன்) பச்சைக் கர்ப்பூரம் சேர்த்தரைத்து, குழையில் அடைத்துக் கொண்டு - புட்டியில் வைத்துக் கொண்டு, வாகு ஆன - (துணை மருந்துக்கு) வன்மை யுடையதான, திரிகடுகு தேனில் உண் - தோல் சீவின சுக்கு, மிளகு, திப்பிலி இந்த மூன்றையும் வறுத்துப் பொடிசெய்த தூளோடு செந்தூரத்தைச் சேர்த்துத் தேனில் குழைத்து உண்பாய், அப்பால் - பிறகு, கறுத்த ஆட்டின் பால் கூட்டிப் பத்தியங்கொள் - வெள்ளாட்டுப் பால் சேர்த்துக் கொண்டு நோய்க்கும் மருந்துக்குந் தகுந்த பத்தியப் பொருள்களைச் சேர்த்துக் கொள்வாய், பத்துநாள் மருந்து உண்ண - இவ்வாறு பத்துநாள் மருந்து சாப்பிட்டால், பலிக்கும் - நோய் நீங்கும், நன்று - (இளைத்த வுடல்) நல்லுடலாகும்.

ஏகாரங்கள் அசைகள். சால என்றது சால் என்பதின் அகரந் தொகுத்தல்.

6

உண்ணப்பால் கூட்டி என்பதை, உண் + அப் பால் எனப் பிரிக்க. இமவாலுகம் என்னுஞ் சொல் முதலுங் கடையும் கெட்டுவால் என நின்றது, இம வாலுகம் - பச்சைக் கர்ப்பூரம். (சஅ)

---

## விக்கலுக்கு அரைக்கு மருந்து

நன்றான பாலிலே சிறுகாஞ் சோரி
நலமான வேர்தட்டிப் போட்டுக் காய்ச்சிக்
குன்றாம லிராத்திரிக்குக் கொள்ளச் சொல்வாய்
குணமாகு மிருமன்முதற் சுரங்கள் யாவும்
சென்றான மோராகா மீனு மாகா
செடக்குறிப்புப் பலம்பார்த்துச் சேர்த்தங் குண்பாய்
வென்றான தாமரையின் மணிப்ப ருப்பை
வெந்நீரிற் கொண்டிடவே விக்கல் போமே.

கருத்து:—இச்செய்யுள் இம் மருந்து உண்ணுங் காலத்தில் தினந்தோறும் இரவில் ஆட்டுப்பால் சாப் பிடும் வழியும், தீருநோயும், ஆகாத பொருளும் விக் கலுக்கு அரைத்துண் மருந்துங் கூறுகின்றது.

சொ - ள்:—நன்றான பாலில் - உடம்புக்கு நன்மையை விளைவிப்பதான வெள்ளாட்டுப்பாலில், சிறுகாஞ்சோரி - சிறுகாஞ்சோரிச் செடியினுடைய, நலம் ஆனவேர் - உயர்ந்த வேரை, தட்டி போட்டு- நருக்கிப்போட்டு, காய்ச்சி - பக்குவமாய்க் காய்ச்சி, இராத்திரிக்கு - இரவில், குன்றாமல் கொள்ளச்சொல்

வாய்-ஒரு நாள் சாப்பிட்ட அளவுக்கு மறுநாள் சாப் பிடும் அளவு குறையாமல் குடிக்கச் சொல்வாய், இருமல் முதல் சுரங்கள் யாவுங்குணம் ஆகும் - இளைப் பிருமல் முதலாகச் சொல்லப்பட்ட நோய்களும் அதிற்சேர்ந்த சுரங்களுமாகிய யாவும் குணமாய்விடும், சென்று ஆனமோர் ஆகா - புளிப்புமோரும் இனிப்பு மோரும் ஆகா, மீனும் ஆகா - எவ்வகை மீன்களும் ஆகா, செடபலம் குறிப்பு பார்த்து - உடம்பின் வன் மையின் குறிப்புகளைக்கண்டு, சேர்த்து - தருந்தவை களைச் சேர்த்துக் கொண்டு, உண்பாய் - உண வருந்துவாய்.

இந்தச் செந்தூரத்தைக் கற்றாழைச் சாற்றால் நான்கு சாமம் அரைத்து ஐந்து புடம்போட்ட காந்த செந்தூரம் பலம் 1. மேற்படியே செய்த பவழபற்பம் பலம் 1. மேற்படியே செய்த கல்நார் பற்பம் பலம் 1. சுத்தி செய்த தாளகம் பலம் 1. சுத்தி செய்த மனோ சிலை பலம் 1, சுத்தி செய்த பூரம் பலம் 1. இந்தத் தினுசு ஆறுக்குஞ் சேர்ந்த ஆறு பல சரக்குகளையும் எருக்கின் பாலால் நான்கு சாமமரைத்து ஈரத்துடன் ஒரு கலசத்திலிட்டுச் சீலை செய்து தாளிக்குள் மண விட்டு அந்த மணலில் வைத்து இரண்டுசாமம் எரித்து மருந்தை எடுத்து நிறுக்கக் குறைந்தால், அந்தக் குறைந்த எடைக்குத் தாளகம், மனோசிலை, பூரம் இவைகளைப் பாகித்துச் சேர்த்து முன்போ லரைத்து எரிக்க வேண்டும். ஆறு எடையும் சரியானவுடன் அதற்குப் பாதி தங்கம், தங்கத்திற்குப் பாதி இலிங்

கம், இலிங்க எடை கந்தகம் சேர்த்துக் கற்றாழைச் சாற்றால் நான்கு சாமம் அரைத்து உலர்த்திச் சட்டியி லிட்டு இரண்டு சாமமெரித்துக் கல்வத்திலிட்டுக் கற்றாழைச்சாற்றால் நான்குசாம மரைத்து வில்லைசெய்து முழப்புடமாக ஐந்துமுறை போட்டுச் செந்தூரித்துக் கொள்ளுகிறார்கள்.

கருப்பல்லிப்பூண்டை யரைத்து விளாங்காய்ப் பிரமாணம் எடுத்து அதில் பாதி அகலில் பரப்பி மேலே தங்கச் சருகை வைத்து அதின்மேல் பாதி விழுதைப் பரப்பி அகல்மூடிச் சீலைசெய்து காயவைத்து 5 எருவில் 6 புடமிட்டுப் பிறகு முருங்கைவேர்ப் பட்டைச் சாற்றால் அரைத்து முழப்புடமாக ஐந்து புடமிட்டுச் சேர்க்கிறார்கள்.

இவ்வாறு செய்வது நூலிற் சொல்லப்பட்டபடி செய்வதன்று. இங்ஙனஞ் செய்தாலும் இதில் சேர்த்த தாளகம், மனோசிலை, பூரம் மூன்றும் எரிப்பில் எடைப் படி யிருந்தாலும் பின்னர் புடம்போடுங் காலத்தில் ஓடி விடுகின்றன. இருக்க வேண்டிய எடை இருக்கிற தில்லை. இவைகள் போய் விடுவதால் நோய்மேல் செய்யவேண்டிய வேலை அரை வேலையேயாகின்றது. ஆகையால் நூற்படி செய்வதே சரியாம். அப்படி செய்யப்படுகிற மருந்துதான் வேலை செய்கிறது.

நூல்வழி:—ஓடிப்போகிற மூன்று மருந்துகளையும் தனித்தனியாக எருக்கின்பாலா லரைத்துப் புடம் போட்டு அச்சாம்பரை ஒவ்வோர் எடை எடுத்துக்

கொண்டு பின்னர் மற்ற சரக்குகளை அவ்வெவ்வெடை சேர்த்துப் புடம்போட்டுக் கொள்வதே. இப்படி செய்வது எடையில் குறைகிறதில்லை. அல்லாமல் எரிப்பு வழியில் தந்திரமாகச் செய்து கொள்ளும் வழிக்கு இலக்கியமும் காணப்படவில்லை.

விக்கலுக்கு:—வென்று ஆன-முற்றின, தாமரையின் மணிப்பருப்பை - தாமரைப் பொகுட்டிலிருக்கின்ற பருப்பை, வெந்நீரில் கொண்டு இட - வெந்நீரிலரைத்துச் சாப்பிட்டால், விக்கல்போம் - விக்கல் நோயானது தீர்ந்துபோகும்.

ஏகாரங்கள் அசைகள், குன்றுமல்-குறையாமல், ஓரளவாய். செல்லல் - நாட் செல்லல், புளித்தல்-ஆதல் - அப்பொழுதாகுதல், இனித்தல், மோர் ஆகா என்று பன்மையாற்கூறினமையால் இருவகை மோர்கள் என்றெழுதப்பட்டது. மீனுமாகா என்ற பன்மையினை மீனின் வகைகளைக்குறிப்பதாயிற்று. வெல்லுதல் - நாளை வெல்லுதல், முற்றுதல். இதுவே அரைக்கு மருந்தாம். (சகூ)

---

## கண்ணோய் வரலாறு

விக்கல்போ மின்னமொரு விவரங் கேளாய்
விசையாக மூலத்திற் கனலே மிஞ்சி
வெக்கையாய்ச் சூடெழும்பி மேக நீராய்
மேற்கொண்டு சிரசுவரை கண்ணிற் றுவிச்

சிக்கவே நீர்கலந்து வாதம் பித்தஞ்
சேத்மகா சங்களினு லொளியோ மங்கும்
பக்கெனவே வாயுவேறிற் குந்த மாகும்
பார்வையிற்றெண் ணூற்ருறு வியாதி பாரே.

கருத்து:—இச் செய்யுள் கண்ணோய் வரும் வழி கூறுகின்றது.

சொ - ள்:—விக்கல் போம் - முன் சொன்னபடி செய்தால் விக்கல் தீரும். இன்னும் ஒரு விவரம் கேளாய் - இன்னு மொரு கண்ணோய் வரும் விவரத்தைக் கேட்பாய், மூலத்தில் விசையாக கனல் மிஞ்சி - உடம்பில் மூலமென்னு மிடத்தில் விரைவாகச் சூடு மிகுதியாய், வெக்கையாய் - வெட்டையாகி, சூடு எழும்பி-அவ் வெட்டையாகிய சூடானது மேலுக்குக் கிளம்பி, மேகநீராய் - அச்சூட்டால் உண்டாவதாகிய மேக நீராக ஆகி, சிரசுவரை மேல்கொண்டு - சிரசுவரைக்கும் மேலுக்குப் போய், கண்ணில் தாவி - கண்களில் பாய்ந்து, சிக்க நீர் கலந்து - கனத்த நீர் கலந்து, வாதம் பித்தம் சேத்ம காசங்களினுல் ஒளி மங்கும் - (அதனுல்) வாதகாசம், பித்தகாசம், சேத்ம காசமென்பவைகள் உண்டாய் அவற்ருல் கண்ணொளி குறையும், பக் என - விரைவாக, வாயு ஏறின் - வாயுவானது தலையில் ஏறினுல், குந்தம் ஆகும் - கண் குந்தமென்னும் நோய் உண்டாம், பார்வையில் - பார்ப்பானுகிய கண்ணிலுண்டாகும், வியாதி-நோய் தொண்ணூற்ருறு - தொண்ணூற்ரு ருகும், பார் - நீ நேரே பார்த்துணர்ந்து கொள்வாய்.

ஏகாரங்கள் ஓகாரம் அசைகள், வெக்கை - சூடு, வைசூரியு மாம், சிக்குதல் - கனத்தல், பந்தித்தல், பக் - விரைவுக் குறிப்பு. (௫௰)

பாரப்பா னேத்திரநோய் தொண்ணூற் றாறும்
பண்ணுகின்ற குணங்குறிகள் சிகிச்சை யெல்லாம்
நேரப்பார் நேத்திர நூ லைந்நூற் றுக்குள்
நிலவரமாய்ச் சொன்னதிலே தயில நெய்கள்
ஆரப்பா மாத்திரைக ளசிய மேற்ற
அவிழ்தங்கண் மைகுழம்பு மபான சுத்தி
காரப்பா னரம்பறிந்து சுடுதல் கண்ணில்
கருவிகொண்டு குத்துகிற கைச்சித் திரங்கள்.

கருத்து:—இச்செய்யுள் இன்னநூலில் கண்ணோயின் விரிவுகளையும், அவற்றிற்கு மருந்துகளையும் சொன்னதாகச் சொல்லுகிறது.

சொ - ள்:—பார் - இந்நிலவுலகில், அப்பால் - பிறகு, நேத்திரநோய் தொண்ணூற்றாறும் பண்ணுகின்ற குறிகுணங்கள் - கண்ணோய்கள் தொண்ணூற்றாறும் செய்கின்ற நோய்க் குறிகளும், குணங்களும், சிகிச்சையெல்லாம்-அவைகளுக்கு மருந்துகளும், நேத்திரம் நூல் ஐந்நூற்றுக்குள் நேரப்பார் - கண் வயித்தியமாக ஐந்நூறு பாடல்களாற் செய்யப்பட்ட நூலிலிருக்கப் பார்த்துக்கொள். நிலவரமாய்ச் சொன்னதில் - வெளிப்படையாகச் சொல்லப்பட்டதில் (எவைகள் உளவென்றால்) ஆர - பொருந்த, அப்பு ஆம் - நீர் வடிவமாகிய, தயிலம் நெய்கள் மாத்திரைகள்

நசியம் - தயிலங்களும், நெய்களும், மாத்திரைகளும், நசியங்களும், ஏற்ற - தகுந்த, அவிழ்தங்கள் - ஒஷதி சம்பந்தமாகச் செய்யப்பட்ட மருந்துகளும், மை - மைகளும், குழம்பும் - குழம்புகளும், அபான சுத்தி-வஸ்தி சிகிச்சைகளும், கார் - அச்சத்துடன், அபால்-அவ்வவ் விடங்களின் இயல்பாயுள்ள, நரம்பு அறிந்து சுடுதல் - நோய் நரம்புகளை யறிந்து சுடுதலும், கண்ணில் - நோய்கொண்ட கண்களில், கருவிகொண்டு குத்துகிற கைச்சித்திரங்கள் - கருவிகொண்டு அறுக்கிற கைவன்மைகளும்.

பார் - நிலம், நேர்தல் - கிட்டுதல், ஆரப்பாம் - ஆர + அப்பு + ஆம் எனப்பிரிக்க. ஆர்தல் - பொருந்தல், அப்பு நீர். ஆர் என்பதில் அகரந் தொகுத்தல். கார் -அச்சம். அ சுட்டு, பால் இயற்கை. 'நரம்பறிந்து சுடுதல்' என்பது சுட்டிகை. இதைச் சிட்டிகை என்பர். சுடுகை என்பது சுட்டுகை எனவும், சுட்டிகை எனவும் வழங்கப் படுகின்றது. தேரர் சுட்டிகையை நன்கு விளக்கிச் சொல்லியிருக்கிறார். அதை ஆங்குக் காண்க.

ஏகாரம் அசை. (௬௧)

சித்திரமா யுபநயனம் வைத்துக் கட்டல்
சிறப்பான வாவி பிறவடைகள் பூச்சு
பத்திரமாய்ப் பத்தியங்கள் கரும சாந்தி
பார்ப்பதற்குச் சாத்தியம சாத்தி யங்கள்

இத்தனையுஞ் சொல்லிவைத்தே னைந்நூற் றுக்குள்
இவையறிந்த வயித்தியனே யீச னுவான்
புத்தியாய்ப் புலத்தியனே பச்சை யான
பூரமென்ற குழம்பதனைப் புகலு வோமே.

கருத்து —இச்செய்யுளும் ஐந்நூற்றில் இன்னின்ன மருந்துகள் உளவென்றதையும், 'பச்சைக் கர்ப்பூரக் குழம்பு சொல்வோம்' என்றதையும் சொல்லுகின்றது.

சொ - ள்:—சித்திரமாய்-அழகாய், உபநயனம் வைத்துக் கட்டல் - உபநயனம் வைத்துக் கட்டுவதையும், சிறப்பு ஆன - உயர்ந்த, ஆவி-மூலிகை முதலியவற்றின் ஆவி காட்டலும், பிறவடைகள் - பிறவடைகளும், பூச்சு - பூசும் மருந்துகளும், பத்திரமாய் பத்தியங்கள் - அச்சத்தோடு இருக்கவேண்டிய பத்தியங்களும், கருமசாந்தி - கருமசாந்திகளும் பார்ப்பதற்கு-பார்த்துக் கண்டறிவதற்கு, சாத்தியம் அசாத்தியங்கள் - தீருநோயும், குறிகளும், தீராநோயும் குறிகளும், (ஆகிய) இத்தனையும் - இவைகளையெல்லாம், ஐந்நூற்றுக்குள் சொல்லி வைத்தேன் - நேத்திர நூல் ஐந்நூற்றுக்குள் சொல்லி வைத்தேன், இவை அறிந்த வயித்தியனே ஈசனுவான்-இவைகளையெல்லாம் நூல்களிலாராய்ந்த மருத்துவனே ஈஸ்வரனுவான், புலத்தியனே-புலத்தியன் என்னும் மாணுக்கனே; பச்சையான பூரம் என்ற குழம்பு அதனைப் புகலுவோம் - பச்சைக் கர்ப்பூரக்குழம பென்று

சொல்லப்பட்டதைச் சொல்லுவோம், புத்தி அறிவி னால், ஆய் - (அதை) ஆராய்ந்துபார்.

சித்திரம் - அழகு, ஏகாரம் அசை. (ருஉ)

---

## பச்சைக்கர்ப்பூரக் குழம்பு

ஓமென்ற வாலுழுவை குங்கு மப்பூ
உறுநல்ல* கிராம் பொன்றும்பூர மொன்றும்
ஆமென்ற சந்தனமுஞ் சண்ப கப்பூ
அன்றி†யரி ரோகணியும் லவங்கப் பத்திரி
நாமென்ற வெள்ளைச்சா றணையின் வேரும்
நலமாகச் சரியெடையாய்க் கூட்டிக் கொண்டே
ஏமென்ற வெள்ளிபறபங் காலுங் கூட்டி
யிதமான கல்வத்தி லேற்றி யாட்டே.

கருத்து:—இச்செய்யுள் பச்சைக்கர்ப்பூரக் குழம்பு செய்யும் வழியைச் சொல்லுகிறது.

சொ - ள்:—ஓம் என்ற - பிரணவ வடிவனை இறைவன் எனக்கு இப்படி யென்று சொன்ன, உறு நல்ல வாலுழுவை குங்குமப்பூ கிராம்பு ஒன்றும் - மிக வுயர்ந்த வாலுழுவை ஒரு எடையும் குங்குமப்பூ ஒரு எடையும் மொட்டு எடுத்த இலவங்கம் ஒரு எடையும், பூரம் ஒன்றும் - பச்சைக் கர்ப்பூரம் ஒரு எடையும், ஆம் என்ற - கண்ணோய்களுக்கு ஆகக் கூடிய

---

(பா - ம்.) *உத்தமனே. †அப்பனே.

வைகளென்று நூல்க ளறுதியிட்ட, சந்தனமும் சண்பகப்பூ - மஞ்சட் சந்தனமும் சண்பகப்பூவும், அன்றி - இவைகளல்லாமல், அரிரோகணியும் லவங் கப் பத்திரி - பீதரோகணியும் லவங்கப்பத்திரியும், நாம் என்ற - நாமம் என்று சொல்லப்பட்ட, வெள் ளைச் சாறணையின் வேரும் - சத்திச் சாறணை வேரும், ஆகிய ஐந்து சரக்குகளுங்கூட, நலம் ஆக - (நோய் நீங்கி) நன்மை யடையும் பொருட்டு, சரி எடையாய்க் கூட்டிக்கொண்டு - ஒவ்வொரு எடையாகவே சேர்த் துக் கொண்டு, வெள்ளி ஏமம் என்ற பற்பம் - வெண் பொன் என்று சொல்லப்பட்ட வெள்ளியினது மிக வும் நுண்ணிய பொடியானது, கால் உம் கூட்டி - ஒரு எடையில் நாலிலொரு எடை சேர்த்து, இத மான - உயர்ந்த, கல்வத்தில் ஏற்றிடாய் - கல்வத்திற் போடுவாய்.

இங்ஙனங் கூறினும் மருத்துவர்கள் ஒவ்வொரு சரக்கையும் மெல்லிய தூளாக்கிச் சேர்க்க வேண்டும்.

ஓம் என்றது இறைவன். ஆம் - பொருத்தம். நாமம் என்றது நாம் என இடை குறைந்தது. நாமம்- வெள்ளை. ஏமம் என்றதும் ஏம் என இடை குறைந் தது. வெள்ளி வெண் பொன் எனக் கூறப்படுதலின் ஏமென்ற வெள்ளி என்றார். அரி - பீதம், ஆகலின் அரிரோகணி பீதரோகணியாயிற்று.

ஏகாரம் இரண்டும் அசைகள். (௫௩)



ஆட்டுவாய் நாற்சாம நற்றே னிட்டே
யாயினது* வழித்தவுடன் பரணி சேர்த்துத்
தீட்டுவாய் வெந்தயம்போற் கண்ணிற் பாதி
தீராத கண்மயக்கங் காசம் போகும்
நாட்டுவாய் தலையிடியும் பித்த நீரும்
நண்டுக்கால் பழுத்தகண்ணு நற்கண் ணாகும்
கூட்டுவாய் நற்சந்த னாதி மூழ்கு
கூத்தியர்க் கிடுமருந்து கூறு வேனே.

கருத்து:—இச் செய்யுள் பச்சைக் கர்ப்பூரக் குழம்பு செய்யும் வழியின் தொடர்ச்சியையும், அத னாற்றீரும் நோய்களையும், அது கையாடுங்கால் இன்ன தயிலம்தான் தேய்த்துக் கொள்ள வேண்டும் என்ப தையும், பெண்ணுக் கிடுமருந்து கூறுவே னென்றுஞ் சொல்லுகின்றது.

சொ - ள்:—நல்தேன் இட்டு நாற்சாமம் ஆட்டு வாய் - (முன் கல்வத்திலிட் டிருக்கின்ற சரக்குக ளெல்லாவற்றையும்) உயர்ந்த தேன்விட்டு நான்கு சாமம் வரைக்கும் நன்றாயரைப்பாய், ஆயின் - அரைத் தானவுடன், அது - அக்குழம்பை, வழித்த வுடன் பரணி சேர்த்து - வழித்து ஒரு பரணியில் வைத்து, வெந்தயம் பாதிபோல் - அரை வெந்தய அளவுபோல் எடுத்து, கண்ணில் தீட்டுவாய் - கண்ணில் போடு வாய், (போட்டால்) தீராத - நெடுநாளாகத் தீராத, கண்மயக்கம் காசம்போகும் - கண் மங்கலும், கண்

(பா - ம்.) *அப்பனே.

காசமும் தீர்ந்து போகும், தலையிடியும் பித்தநீரும் - மண்டை யிடிப்புக்கும் பித்த நீர்க்குங்கூட, நாட்டு வாய் - (முன் சொன்ன அளவுபடி) கண்ணில் போடு வாய், (இது போடுவதனால்) நண்டுக்கால் பழுத்த கண்ணும் நல் கண் ஆகும் - நண்டுக் காலைப்போல் பழுத்துள்ள கண்களும் நல்ல கண்களாய் மாறிவிடும், நல் சந்தனாதி கூட்டுவாய் மூழ்கு - (இதற்கு) உயர்ந்த சந்தனாதி தயிலஞ் செய்து தலை மூழ்குவாய், கூத்தி யர்க்கு இடு மருந்து கூறுவேன் - (இனி) கூத்தியர் களுக்கு வைக்கின்ற மருந்து செய்யும் வழியைச் சொல்லுகின்றேன்.

ஆட்டுதல் - அரைத்தல், தீட்டுதல் - போடுதல், நாட்டுதல் - போடுதல், கூட்டுதல் - செய்தல்.

ஏகாரங்க ளிரண்டும் அசைகள். (௬௪)

---

## பெண்ணுக்கு இடுமருந்து

கூறுவேன் விந்துவொரு கழஞ்சு வாங்கிக்
கோவைநற் பழத்துவிரை கழஞ்சு சேர்த்துத்
தேறுமோர் பேய்க்கருப்பஞ் சாற்று லாட்டிச்
சிறுமணியா யுருட்டியதை யுலர வைத்து
மாறவே வெற்றிலைப்பாக் கருந்தும் போது
மணியொன்று தெரியாமன் மங்கைக் கீந்தால்
சேரவே யுனைப்பிரிய மாட்டாள் கன்னி
தியக்கமிக்த் தெளிவதற்குத் தேங்காய்ப் பாலே.

கருத்து:—இச்செய்யுள் பெண்களுக்கிடு மருந்து செய்யும் வழியையும், இடும் வகையையும், அதன் மாற்றையும் சொல்லுகிறது.

சொ - ள்:—கூறுவேன் - முற்செய்யுளில் சொல்லுவதாகச் சொன்னதை இச்செய்யுளிற் சொல்லுவேன், விந்து ஒரு கழஞ்சுவாங்கி - விந்து ஒன்றே கால் வராகனெடை எடுத்து, நல்கோவைப் பழத்து விரை கழஞ்சு சேர்த்து - (அத்துடன்) உயர்ந்த கோவைப் பழத்து விரை, ஒன்றேகால் வராகனெடை சேர்த்து, தேறும் ஓர் பேய்க்கருப்பு அம் சாற்றால் ஆட்டி - நன்றாய் முற்றின ஒரு பேய்க்கரும்பின் சாற்றினலரைத்து, சிறுமணியாய் உருட்டி - சிறிய மாத்திரைகளாக வுருட்டி, அதை உலரவைத்து - அம் மருந்தை (நிழலில்) உலரச்செய்து, வெற்றிலைப்பாக்கு அருந்தும்போது - அப்பெண் வெற்றிலைப் பாக்குப் போட்டுக் கொள்ளுங் காலத்தில், தெரியாமல் - அவளுக்குத் தெரியாதபடி, ஒன்று மணி - ஒரு மாத்திரையை, மாற - அவள் புத்தி மாறும்படி, மங்கைக்கு ஈந்தால் - அவளைப் போட்டுக் கொள்ளும்படி கொடுத்தால், கன்னி - அப்பெண்ணனவள், சேர - உன்னைச் சேர்ந்தால், உன்னை பிரியமாட்டாள் - மீண்டும் உன்னைப் பிரிந்து நீங்க மாட்டாள்; மிகு அத்தியக்கம் - அவளுக்குண்டான மிகுந்த அம்மயக்கமானது, தெளிவதற்கு — நீங்கித் தெளிவடையும் பொருட்டு, தேங்காய்ப்பால் - தேங்காய்ப்பால் மாற்று ஆகும்.

மாறுதல் - வேறுபடல், ஏகாரங்கள் இரண்டும் அசைகள். கன்னி பருவத்தை யுணர்த்தாமல் பெண்ணுக் காயிற்று. (ருரு)

---

## பல்வலிக்குக் குடிநீர்

பாலென்றாற் பச்சைப்பால் குடிக்கத் தீரும்
 பல்வலிக்கு மருந்தொன்று பகரக் கேளாய்
கோலென்ற நீர்முள்ளி வேரை* வாங்கிக்
 கொட்டுவாய் பலம்பத்து பாண்டத் துள்ளே
சீலென்ற வசம்பதரைப் பலமும் போட்டுத்
 தீயெரித்தெண் படிநீரெட் டொன்றா யாக்கி
மேலென்ற வந்திசந்தி கொப்பு ளிக்க
 வீக்கமொடு பல்வலியும் விட்டுப் போமே.

கருத்து:—இச்செய்யுள் பல்வலிக்குக் கொப்புளிக்குங் குடிநீர் கூறுகின்றது.

சொ - ள்:—பால் என்றால் - தேங்காய்ப்பால் ஆகும் என்று சொன்னால், (அப்பால்) பச்சைப்பால் குடிக்கத்தீரும் - பச்சைப்பாலாகக் குடித்தால் தீரும், பல்வலிக்கு - பல்நோய்க்கு, ஒன்று மருந்து பகரக் கேளாய் - ஒரு மருந்தைச் சொல்லக் கேட்பாய், கோலம் என்ற-நீரோடு மிடத்துள்ள தென்று சொல்லப்பட்ட, நீர் முள்ளி வேரை பத்து பலம் வாங்கி பாண்டத்துள் கொட்டுவாய் - நீர் முள்ளி வேர் பத்துப் பலம் வாங்கி ஒரு சட்டியிலிடித்துக் கொட்டி,

---

(பா - ம்) * நீர்முள்ளிவிரை.

சீலம் என்ற - (அங்நோயைப் போக்குங்) குணமுள்ள தென்று சொல்லப்பட்ட, வசம்பு அது - வசம்பை, அரைப்பலமும் போட்டு - அரைப்பலம் இடித்துப் போட்டு, எண்படி நீர் - எட்டுபபடி தண்ணீர்விட்டு, தீ யெரித்து - தீயிலிட்டெரித்து, எட்டு ஒன்று ஆக்கி- ஒருபடியாகக் குறுகக்காய்ச்சி, என்றுமேல் - சூரியன் மேற்கிற் செல்லுகின்ற, அ - அந்த, அந்தி - மாலையிலும், சந்தி காலையிலும், கொப்புளிக்க-வாயிலூற்றிக் கொப்புளித்தால், பல் வீக்கமொடு வலியும் விட்டுப் போம் - பல்லடியிலுண்டாகும் வீக்கமும் நோயும் அவ்விடம் விட்டு நீங்கிப்போய்விடும்.

ஏகாரங்கள் இரண்டும் அசைகள். கோலம் எனற்பாலது கோல் எனவும், சீலம் எனற்பாலது சீல் எனவும் கடை குறைந்தன. கோலம் - நீரோட்டம், சீலம் - குணம், மேலென்ற என்றதை மேல்+என்று +அ எனப்பிரிக்க. மேல் - மேற்கு. என்று - சூரியன், அ சுட்டு கொப்புளித்தல் எனவும் கொப்பளித்தல் எனவும் ஆட்சியுண்டு. ஆனல்,

"நாகிள வரிவண் டெண்டு
நறவுகொப் புளிக்குங் கைதாய்"

எனவும்,

"கொள்ளிவா யலகைவாய்
திறந்துகனல் கொப்புளிப்ப"

எனவும், அதிவீரராம பாண்டியரும், பரஞ்சோதி முனிவரும் கூறுவதாலும்,

"மருக்காரை சுக்கு மருதந்தோல் வெள்வேல்
எருக்கா விரைபிரம்போ டேழும் — நருக்கியே
நாலிலொன் றாய்க்காய்ச்சி நாற்பதுநாள் கொப்புளிக்கப்
பாலன்பல் லாங்கிழவன் பல்"

என எழுசரக்குக் குடிநீர் கூறப்படுவதாலும் கொப்பு ளித்தல் பாடமே சிறந்ததெனக்கொள்க. (நிசு)

---

## ஒருதலைவலிக்கு நசியம்

விட்டுப்போ மொருதலைநோய் மண்டைக் குற்றல்
விசையான வலிக்கெல்லாம் நசியங் கேளாய்
தட்டுப்போஞ் சுக்குமிரு பலமெண் ணுழி
சலத்திலிட்டு நாழியாய்க் குறுகக் காய்ச்சித்
தட்டுப்போந் தேங்காய்நெய் யரைக்கால் விட்டுத்
தாழ்வில்லாக் குங்கும்ப்பூ வராக னெடைபோட்
டெட்டிப்போ நெய்வடித்து நசிய மூட்ட
இருந்தவிடந் தன்னைவிட் டேகும் பாரே.

கருத்து:—இச்செய்யுள் ஒற்றைத் தலைவலிக்கு நசியஞ் செய்யும் வழி கூறுகின்றது.

சொ-ள்:—விசை ஆன ஒருதலைநோய் மண்டைக் குற்றல் வலிக்கு எல்லாம் - விரைவாக மோதுகின்ற தலையின் ஒரு பக்கத்தில் வருநோய், மண்டைக் குற்றல் மற்றைய (முக) வலிகள் முதலிய எல்லா வற்றிற்கும், விட்டுப்போம் - (அவைகள் அக் கருவிகளை) விட்டுப் போக்குவிக்கக் கூடிய, நசியம் கேளாய் -

விடு மருந்து (நசியம்) சொல்லக் கேள், தட்டு - குற்றத்தை (நஞ்சை), போம் - போக்கின, சுக்கும் - சுக்கும், இருபலம் - இரண்டுபலம் எடுத்திடித்து, (ஒரு மண் சட்டியில்) எண் நாழி சலத்தில் இட்டு - எட்டுப் படி தண்ணீரிற்போட்டு, நாழியாய்க் குறுகக்காய்ச்சி- ஒரு படியாய்க் குறையும்படி காய்ச்சி வடித்து, தட்டு- திப்பியை, போம் - போக்கின, தேங்காய் நெய் அரைக்கால் விட்டு - தேங்காய் நெய் அரைக்கால்படி அச் சுக்குக் குடிநீருடன் விட்டு, தாழ்வு இல்லா - உயர்ந்த, குங்குமப்பூ வராகனெடை போட்டு-குங்குமப்பூ ஒருவராகனெடை!(மேற்படி குடிநீரால் அரைத்துப்) போட்டு, எட்டிப் போம் - பக்குவம் வருகிற வரைக்குங் கடந்து வருகிற, நெய் வடித்து - நெய்யை வடித்து வைத்துக்கொண்டு, நசியம் மூட்ட - மூக்கில் (அளவுப்படி) விட, பார் இருந்த இடந் தன்னைவிட்டு ஏகும் - இவ்வுலகத்தில் (அந் நோய்கள்) இருந்த இடத்தைவிட்டுப் போய்விடும்.

ஏகாரம் அசை. தட்டு - மேல்தோல், புறணி; அது சுக்குக்குக் குற்றம். 'சுக்குக்குப் புறணி நஞ்சு கடுக்காய்க்கு அகணி நஞ்சு' என்னும் மருத்துப் பழமொழியா லுணர்க. தட்டு - விலக்கு. அது திப்பிக் காயிற்று. எட்டுதல்-கடத்தல். போம் இரண்டும் பிற வினைப் பொருளின.

நசியம் என்றது மூக்கில் பிழி மருந்தும், விடு மருந்துமாம். பிழிமருந்து : இலை, பூ முதலியவைகளை நசுக்கிப் பிழிதல், நசிய மாத்திரைகளைச் சில சாறு

களிலாவது, முலைப்பாலிலாவது ஊரவைத்துப் பஞ்சில் நனைத்துப் பிழிதல் முதலியவையும்; விடுமருந்து: இந்த நசியம் போல்வதுமாம்.

இவற்றில் பிழி மருந்தை;

"தும்பை யிலையைக் கசக்கி மூக்கிலே
நம்பி யேவிடச் சந்நி நாசமாம்"

எனவும்,

"பத்தி யாகவே திரிபுரத் தாளிலை
சுத்த நாசியிற் றுளிது ளித்திட
உற்ற சந்நியின் றோட வலிகளும்
தத்தி யோடித் தலைதடு மாறுமே"

எனவும் வருவனவற்றாலும்;

விடு மருந்தை;

"சர்க்கரையுங் குங்குமமுஞ் சாற்றரிய வாவின்பால்
இக்கனியி னெய்யோ டிவைநான்கும்—பக்குவமாய்க்
காய்ந்துகடு கோடிறக்கிக் காரிகையே நாசிவிட
மாய்ந்துவிடும் பீநசவேர் மாண்டு."

எனவும் வருவதாலு முணர்க. (௫௭)

---

## மேகநீர்க்குப் பவழ பற்பம்

ஏகுமே மேகநீ ரிருப துக்கும்
இதமான பவழபற்ப மொன்று சொல்வேன்
வாகுபெற முயலெலும்பு சுட்ட சாம்பர்
வண்மையாய்ப் பலமொன்று குமரிப் பாலால்

பாகுபெற வரைத்துருட்டிக் குகையாய்ப் பண்ணிப்
பவழமஃ தொருபலமுங் கிராம்பு மாஞ்சில்
வேகுமென்ற காற்கழஞ்சு* வீரங் காறுன்
விசையான முயிலிரத்தம் விட்டே யாட்டே.

கருத்து:—இச்செய்யுள் பவழபற்பம் செய்யும் வழியைச் சொல்லுகின்றது.

சொ - ள்:—ஏகும் - அடிக்கடி போய்க்கொண்டிருக்கின்ற, மேகநீர் இருபதுக்கும் - இருபது வகையான மேக நீரிழிவுகளும் தீர்தற்கு, இதம் ஆன-நன்மையைச் செய்வதான, ஒன்று பவழபற்பம் சொல்வேன் - பவழத்தைப் பற்பம் செய்யும் ஒரு முறையைச் சொல்வேன், வாகு பெற - நோய் தீர்ந்து வன்மையையடைய, முயல் எலும்பு சுட்ட சாம்பர் - முயலினது எலும்பை நன்றாய் வெளுக்கும்படி சுட்டு அந்த நீறு, பலம் ஒன்று - ஒரு பலத்தை, குமரிப் பாலால் - கற்றாழைச் சாற்றால், வண்மையாய் பாகு பெற அரைத்து - வளப்பமாக மெழுகு பக்குவமாகும்படி அரைத்து, உருட்டி - வழித்துருட்டி, குகையாய்ப் பண்ணி - மூசையாகச் செய்து, பவழம் அஃது - பவழமானது, ஒரு பலமும் - ஒரு பலமும், கிராம்பு மாஞ்சில் - இலவங்கம் சடா மாஞ்சிலான இந்த இரண்டும், கால் கழஞ்சு - வகை ஒன்றுக்குக் கால் கழஞ்சும், வேகும் என்ற வீரம் - பட்டால் வெந்துவிடு மென்று சொல்லப்படுகின்ற வீரம், கால் -

---

(பா - ம்.) *வேகுமென் றொருகழஞ்சு.

கால் கழஞ்சும், (ஆகச் சேர்த்து நான்கு சரக்குகளை யும் கல்வத்திலிட்டு) விசை ஆன முயல் இரத்தம் விட்டு ஆட்டு - புதிய முயல் இரத்தம் விட்டு அரைப் பாய்.

ஏகாரம் இரண்டும் அசைகள். தான் இசை நிறை.

வாகு-வன்மை, பாகு-பக்குவம், வேதல்-கொளுந் தல். குமரிப்பால் என்றது குமரிச் சாற்றை. (௩அ)

ஆட்டியே வில்லை தட்டிக் காயவைத்த
வதைப்பிறகு* குகையில்வைத்துச் சீலை செய்து
நாட்டியே யைம்பதெருப் புடத்தைப் போடு
நலமாகப் பவழமது பற்ப மாகும்
கூட்டியே யமிர்தசர்க் கரையிற் கொள்ளக்
கொடிதான மேகநீர் குடியோ டிப்போம்
மேட்டிலே விரைத்தவிரை போலே யாச்சு
மிலேச்சருக்கு நூல்கிடைத்தும் வீணும் [illegible]ே.

கருத்து:—இச்செய்யுள் பவழபற்பம் செய்யும் வழியும், அதற்குத் துணைமருந்தும், அதனால் தீரு நோயுங் கூறுகின்றது.

சொ - ள்:—ஆட்டி - (அவ்வாறு) அரைத்து, வில்லை தட்டிக் காயவைத்த அதை - சிறுவில்லைகளா கத் தட்டி வெயிலி லுலர்த்தப்பட்ட அப்பவழத்தை, பிறகு - பின்னர், குகையில் வைத்து சீலைசெய்து -

(பா - ம்) *அப்பனே.

(முன்செய்த முயல் எலும்பு) மூசையில் வைத்து (மேலும் அப்பில்லையால் மூடி) மண் சீலைசெய்து, (உலர்த்தி) ஐம்பது எருநாட்டி புடத்தைப் போடு - ஐம்பதெரு வடுக்கி நடுவில் இம்மூசையை வைத்துப் புடம் போடுவாய், பவழம் அது நலம் ஆகபற்பம் ஆகும் - பவழமானது நல்ல குணத்தோடு பற்பமாகும், கூட்டி - (அதை) அம்மூசையுடன் கூட்டிப் பொடிபண்ணி, அமிர்த சர்க்கரையில் கொள்ள - சீந்தில் சர்க்கரையாகிய துணைமருந்துடன் (வழக்க அளவுப்படி உண்டால், கொடிது ஆனமேகநீர் குடி ஓடிப் போம் - (உடலுக்குக்) கொடுமையை உண்டாக்குவதான மேகநீர் இருபதும் முன் குடியிருந்த வுடலை விட்டு வேறிடத்திற்கு ஓடிக்குடிபோகும், மிலேச்சருக்கு நூல் கிடைத்தும் - அறிவில்லாதவர்களுக்கு இந்நூலும் இதுபோன்ற நூல்களுங் கிடைத்தும், மேட்டிலே விரைத்த விரைபோல் ஆச்சு - (அந்நூல்களில் சொல்லப்பட்ட மருந்துகளைச் செய்யாமையால், அந்நூல்கள்) மேட்டில் விரைத்த விரைகள் முளையாதன போல் பயனின்றிப் போயின, வீணும்பார் - ஆகையால் அவர்கள் செய்யுந் தொழில் யாவும் வீணவனவேயாம், மாணுக்கனை நீ அதை நன்குணர்வாய்.

ஏகாரங்கள் அசைகள். நாட்டுதல் - வைத்தல், ஈண்டு அடுக்குதல்.

சிலர் முயலெலும்பு மூசையை நீக்கிப் பவழத்தை மாத்திரம் எடுத்துக் கொள்ளுகின்றனர். அஃது மேக

நீரைக் குணப்படுத்த வில்லையென்றும் மூசையைச் சேர்த்துக் கொண்டாலே மேகநீரைக் குணப்படுத்து கிற தென்றும் இதைக் கையாடுகிறவர்கள் கூறுகின்ற னர். ஆகையால் கூட்டி என்பதற்கு மூசையைக் கூட்டி என்றெழுதப்பட்டது. ஆனால் மூசையைச் சேர்ப் பது வழக்கத்திலில்லை.

பவழத்தின் குணத்தை;

"துகிரையே யழுக்கொழித்துத் துவிதமும் பண்ணலாமேல்
வகிர்வடு வனையவுண்கண் வனிதையே யினிதுகேண்மோ
உகிர்முனி ரத்தகாச முப்பசம் பல்லேசோபை
நகிர்வதா நெய்நீர்பின்னர் நவில்வன வென்றுமுன்னே." .

என்பதாலறிக.

'நலமாகப் பவழம் பற்பமாகும்' என்றது நல்ல வெண்மையாம் என்பதாம்.

பற்பங்கள் வெண்மையாகவே யிருக்க வேண்டு மென்றதை:

"நீறிருந்த படியெல்லாம் நிறமது வெளுப்பே யாகும்
வேறிந்த வெளுப்பை யல்லால் வெறுநிறம் பற்பமல்ல
கூறிந்தத் தங்க மாத்திரம் குலம்பொய்யா நிறமுமஞ்சள்
வாறிந்தப் படியே யல்லால் மற்றெல்லா மருட்டுத்தானே.

என்பதாலறிக. (௫௬)

## பிரளிநோய் நெய்

வீணாகப் போகாம னூலைப் பாரு
வேண்டியே தவசிருந்து பெற்ற பிள்ளை
வாணாளை மாய்க்கவந்த பிரளி நோய்க்கு [வேன்†
வன்மையுறு* மெண்ணெயொன்று வகையாய்ச் சொல்
பாணான வவிரிவேர்த் தோலி ரண்டு
பலத்துடனே புன்கினது கொழுந்து காலாம்
காணமற் பொடிப்பொடியா யரிந்து கொண்டு
கலயமிட் டேரண்டத் தெண்ணெய் வாரே.

கருத்து:—இச்செய்யுள் பிரளி நோய்க்குக் குடிமுத்து நெய் செய்யும் வழி கூறுகின்றது.

சொ - ள்:—வீணாகப் போகாமல் நூலைப் பார்-(மாணாக்கனாகிய நீ செய்யும் மருத்துவத் தொழில்) வீணாகப் போகாதபடி நூல்களை ஆராய்ந்து பார், வேண்டி தவசு இருந்து பெற்றபிள்ளை - (வேண்டுமென்று) விரும்பி நோன்புகள் பலநோற்று (அவற்றின் பயனாக) பெற்றபிள்ளையின், வாணாளை மாய்க்க வந்த பிரளி நோய்க்கு - ஆயுளை யொழிக்க வந்த பிரளிநோய் தீர்வதற்கு, வன்மையுறும்-பலம் பொருந்திய, ஒன்று எண்ணெய் வகையாய்ச் சொல்வேன் - ஒரு எண்ணெயை நன்றாய்ச் சொல்வேன், பாழ்நானம் - கெட்ட மணத்தையுடைய, அவிரிவேர்த் தோல் இரண்டு பலத்துடன் புன்கினது கொழுந்து கால் ஆம் - அவிரி வேர்ப்பட்டை இரண்டு பலமும்

---

(பா - ம.) *மக்களே. † கேளு.

புன்கங் கொழுந்து கால் பலமும், காணமல் - இவ்விரண்டின் வடிவங்கள் காணுவாறு, பொடிபொடியாய் அரிந்துகொண்டு - சிறு பொடியாய் அரிந்துகொண்டு, கலயம் இட்டு - (அப்பொடியை) ஒரு மட்சட்டியிலிட்டு, ஏரண்டத்து எண்ணெய் வார் - அதில் சிற்றாமணக் கெண்ணெய் வார்ப்பாய்.

உகரம் சாரியை, ஏகாரங்கள் அசைகள்.

பாழ்நான என்றது பாளுன என்றாயிற்று. வாளுள்போல நானம் மணம், வாளுள் என்பதற்கும் அவ்விதியே. காணமல் - வடிவங் காணப் படாமல். (௬௰)

ஏரண்டத் தெண்ணெயரைப் படியாய் விட்டங்
கென்மகனே ரவிமுகத்தி லெட்டு நாள்வை
கூறண்டத் தெண்ணெய்தனை வெதுப்பிக் கொண்டு
குழந்தைகட்குக் கணைபிரளி சோகை மாந்தம்
*சாறென்ற வெண்ணெயது கரண்டி வீதம்
தப்பாமற் கொண்டிடவே சொல்லக் கேளு
காருண்ட மேகசூலம்† பெருங்காற் றாலே
கண்காணத் தோடுகின்ற கதைபோற் போமே.‡

கருத்து:—இச்செய்யுள் பிரளிநோய்க்குக் குடிமுத்து நெய் செய்யும் வழியின் தொடர்ச்சி கூறுகின்றது.

---

(பா - ம்.) *தாருண்ட மால்கமலக் கையில்வாழும் சக்கரத்துக் கடுத்ததொன்று தானீவீரேல்.

† மேகசலம். ‡கதைபோலாமே.

சொ - ள்:—ஏரண்டத்து எண்ணெய் அரைப்படியாய் விட்டு - சிற்றாமணக்கு நெய் அரைப்படி யளவு அதில் விட்டு, என்மகனே - எனக்கு மாணாக்க முறையால் மகன்போன்றவனே, எட்டுநாள் ரவிமுகத்தில் வை - எட்டுநாள் வரைக்கும் வெயிலில் வை, கூறு - இப்படி சொல்லப்பட்ட, அண்டத்து எண்ணெயை - ஆமணக்கு நெய்யை, வெதுப்பிக் கொண்டு - சுட வைத்து, சாறு என்ற - பொருந்துவதென்று சொல்லப்பட்ட, எண்ணெய் அது கரண்டி வீதம் தப்பாமல் கொண்டிட - இந்நெய்யை ஒரு கரண்டியளவு தப்பாமற் கொள்ளச் செய்தால், சொல்லக் கேள் - அது செய்யுங் குணங்களைச் சொல்லக் கேள், குழந்தைகட்கு - குழந்தைகளுக் குண்டாகும், கணைபிராணி சோகை மாந்தம் - கணையும், பிராணியும் (வலியும்) சோகையும், மாந்தமும், கார் உண்ட மேக குலம் - கறுத்த மேகக்கூட்டங்கள், பெருங்காற்றால் - பெரிய காற்றினால், கண்காணாது ஓடுகின்ற கதைபோல் போம் - கண்ணுக்குத் தெரியாமலோடி மறைந்து விடுகின்ற செயல்போல் போய்விடும்.

தன், உ சாரியை; ஏகாரங்கள் அசைகள். சாரென்ற எனற்பாலது சாறென்ற என எதுகை நோக்கிற்று. (சுக)

---

## அறுகம்வேர்க் கிருதம்

போமப்பா லறுகம்வேர்க் கிருத நூலிற்
புகலவில்லை யிந்நூலிற் புகழ்ந்து சொல்வேன்
நாமப்பார் நன்காய்ந்த* வறுகின் மூல
நன்றாக வொருதுலாம் நிறுத்துக் கொண்டு
வாமப்ப விடித்ததனைப் பாண்டத் திட்டு
வளமாக நூறுபடி சலந்தான் விட்டங்
கோமப்பா நான்குபடி யாகக் காய்ச்சி
உற்றநீர்† வடிகட்டி யிருத்துக் கொண்டு
தாமப்பா யாவினெய் நாழி விட்டுத்
தடையறவே மதுரமரைப் பலந்தா னாமே.

கருத்து:—இச்செய்யுள் அறுகம் வேர்க் கிருதம் செய்யும் வழியைக் கூறுகின்றது.

சொ - ள்:—போம் அப்பால்-அஃது ஆனபிறகு, நூலில் - மற்ற நூல்களில், அறுகம் வேர்க் கிருதம் புகல இல்லை - அறுகம் வேர் நெய் சொல்லவில்லை, இ நூலில் புகழ்ந்து சொல்வேன் - இந்த நூலில் அதைப் புகழ்ந்து சொல்வேன், நாமம் - அச்சத்தை விளைவிக்கின்ற, பார் - இந் நிலவுலகத்தில், நன்கு ஆய்ந்த அறுகின் மூலம் - நன்றாய்க் கணுநீக்கி ஆராய்ந்த அறுகங்கட்டை, ஒரு துலாம் நன்றாக நிறுத்துக் கொண்டு - நன்றாய் ஒருதுலாம் நிறுத்துக்கொண்டு, அதனை வாமம் அப்ப இடித்து பாண்டத்து இட்டு -

(பா - ம்.) *சொல்லுகின்றோம். †உத்தமனே.

அக் கட்டையை நன்று யிடித்து ஒரு சட்டியிலிட்டு, நூறுபடி சலம் வளமாக விட்டு - நூறுபடி நல்ல தண்ணீர்விட்டு, நான்கு படியாகக் காய்ச்சி - நான்கு படியாகச் சிறுகும்படியாகக் காய்ச்சி, உற்ற நீர் - ஏற்பட்ட குடிநீரை, வடிகட்டி யிருத்துக் கொண்டு - வடிகட்டிச் சிக்கை நீக்கி ஒரு சட்டியில் இருத்துக் கொண்டு, (அதில்) தாமம் - கட்டுப் பந்தியிலிருந்து, பாய் - மோதுகின்ற, ஆவின் நெய் நாழிவிட்டு - பசு நெய் ஒருபடி விட்டு, தடையற - யாதோர் இடை யூறு மில்லா வண்ணம், மதுரம்-அதிமதுரம், அரைப் பலம் ஆம் - அரைப் பலமும், (இது செய்யுங்கால் இது கைகூடி வரப்போற்ற வேண்டிய,) அ பா- அந்த பாச்சிந்தனையானது, ஓம்-ஓம் என்னும் பிரணவமாம்.

தான் இசைநிறை ஏகாரம் அசை. இச்செய்யுள் ஓரடிமேல் வைப்பு. நாமம், நாம் எனவும், வாமம், வாம் எனவும் குறைந்தன. நாமம் - அச்சம், வாமம் - அழகு, தாமம் - கட்டுவரிசை. (௬௨)

பலமொன்று தாமரைசெங் கழுநீர் மூலம்
பாசிமா* விருகழஞ்சு மைபோ லாட்டிப்
பெலமென்ன மாதுளையென் பழநீர் நாழி
பிறழாமற் கலக்கியே நெய்யில் விட்டுச்
செலமெல்லாம் வற்றுமட்டுங் கமலம் போலத்
தீயெரித்துப் பதம்வரும்போ திருத்துக் கொண்டு
குலமெல்லா மூலத்தி லிருந்த சூடு†
கொடியவாங் கிரிச்சரங்கள் கிராணி போமே.

(பா - ம்.) *பாச்சிமா. †குலமென்ன மூலத்தி லஸ்திசூடு.

கருத்து:—இச்செய்யுள் அறுகம் வேர்க் கிருதம் செய்யும் வழியின் தொடர்ச்சியும் இதனாற் றீரும் சில நோய்களும் கூறுகின்றது.

சொ - ள்:—தாமரை மூலம் - தாமரைக் கிழங்கு, செங்கழுநீர் மூலம் - செங்கழுநீர்க் கிழங்கு ஆகிய இவைகள், பலம் ஒன்று - வகைக்கு ஒரு பலமும், பாசிமா - பச்சைப் பருப்பின் மாவு, இரு கழஞ்சு - கால் பலமும் கூட்டி, மைபோல் ஆட்டி - (அக்குடி நீரால்) மைபோ லரைத்து, மாதுளையின் பழநீர் நாழி - மாதுளம்பழச் சாறு ஒருபடி, பெலம் என்ன - இக்கிருதத்திற்கு வன்மையுண்டா மென்று, பிறழா மல் கலக்கி நெய்யில் விட்டு - தவறாமல் நெய்யில் கலக்கிச் சேர்த்து, (அடுப்பேற்றி) செலம் எல்லாம் வற்றும் மட்டும் - தண்ணீ ரெல்லாஞ் சுண்டுகிறவரையில், கமலம்போல தீயெரித்து-கமல நெருப்பாக எரித்து, பதம் வரும்போது இருத்துக் கொண்டு - நெய் பக்குவத்தில் இருத்துக் கோண்டு (உண்டால்) மூலத்தி லிருந்த சூடு குலம் எல்லாம் - மூலாதாரத்தி லிருந்த எவ் வகையான சூட்டுக் கூட்டங்க ளெல்லாமும், கொடிய ஆம் - கொடுமையை யுடையவையான, கிரிச்சரங்கள் - நீர்க்கட்டு முதலியவைகளும், கிராணி - கிரகணி பேதிகளுமாகிய இவைகள், போம் - தீரும்.

ஏகாரங்கள் அசைகள். பாசிமா சடைச்சி என் பாரும் அல்லாமல் பாசி மாவை; மாபாசி என ஆக்கிப் பசுவின் பால் என்பாருமுளர். கமலாக்கினி முன்னர்க் கூறப்பட்டது. கிரிச்சரம் ஒன்றைக் கூறி

னும், அக்நீர் வழி நோய்க ளெல்லாங் கொள்ளப் படும். அவற்றை யுணர்த்தற்கே முதலியவை என் றெழுதப்பட்டது. (௬௩)

இராணிபோம் பிரமியங்கள் கபாலச் சூடு
கிறுகிறுப்பு தீருமொரு* பத்து நாள்கொள்
திராணியாய்க் கொண்டகற்ப முரிவு† தீரும்
சிவனருஞ் சடைமீதிற் றரித்த கற்பம்
பிராணிகளுக் காகவிந்தக் கிருதஞ் சொன்னேன்
பிழைக்கவென்றாற் செய்துண்டு பெரியோ ராவார்
இராணியென்ற மாதர்களைச் சையோ கித்த
இடுப்புளைவு கடுப்புவலி யெல்லாம் போமே.

கருத்து:—இச்செய்யுள் அறுகம் வேர்க் கிருதத் தால் தீரும் மற்றைய நோய்களைக் கூறுகின்றது

சொ - ள்:—ஒரு பத்துநாள் கொள் - பத்துநாள் சாப்பிடு, பிரமியங்கள் கபாலச் சூடு கிறுகிறுப்பு தீரும் - பிரமியநோய், கபாலத்திலேறுஞ் சூடு மயக் கம் இவைகள் தீரும், திராணியாய்க் கொண்ட கற் பம் முரிவு தீரும் - வன்மையாய்க் கொண்ட கற்பத் தாலுண்டான குற்றந்தீரும், சிவனரும் சடைமீதில் தரித்த கற்பம் - சிவபெருமானவர் தமது சடா பாரத்தின் மேற்சூடிய அறுகங்கட்டைக் கற்பமாம், இந்தக்கிருதம் - இந்த நெய்யை, பிராணிகளுக்கு ஆக சொன்னேன் - பல உயிர்கள் பிழைக்கும் பொருட் டுச் சொன்னேன், பிழைக்க என்றால் - நெடுநாள்

(பா - ம்.) *தீருமடா. †கொண்டுவர வெகுநோய்.

பிழைத்திருக்க வேண்டுமானால், செய்து உண்டு பெரி யோர் ஆவார் - இதைச் செய்து குடித்து ஆயுள் நாளிற் பெரியவராவார்கள், இராணி என்ற மாதர்க ளைச் சையோகித்த - பெண்களோடு கூடிக்கலந்ததனு லுண்டான, இடுப்பு உளைவு கடுப்புவலி எல்லாம் போம் - இடுப்பு நோய், உடற்கடுப்பு, வலித்தல் முத லிய யாவும் தீரும்.

ஏகாரம் அசை. கிராணிபோம் அந்தாதித் தொடக்கு. சிவபிரானுக்கு மிக்குயர்ந்த தென்பார், 'சிவனுருஞ் சடைமீதிற்றரித்த கற்பம்' என்றார்.

இதனை;

"பகுதி தகுதி விகுதியெனும் பாட்டில்
இகலி லிடையை யிரட்டித்—தகவின்
அருச்சித்தான் முன்னு மதுபின்னுங் கண்டீர்
திருச்சிற் சபையானைத் தேர்ந்து."

என்பதாலறிக. (௬௪)

## கிரந்திக்கு இரசப்புகை

போமப்பாற் கிரந்திக்குப் புகைதா னென்று
புகழான சூதமொரு கழஞ்சு வாங்கி
வாமப்பாக் காரீயங் கழஞ்சு கால்தான்*
மாட்டிரண்டு மொன்றாகப் பொடியாய்ச் செய்து
தாமப்பா வெருக்கம்வேர் சரியாய்ச் சேர்த்துத்
தாழ்வில்லா மூன்றுதினம் புகைபி டிக்கத்
தோமப்பாக் கிரந்தியொடு சூலை போகுந்
துடியான மருந்தொன்று சொல்லக்கேளே.

(பா - ம்.) *கழஞ்சுவாங்கிச் சேர்த்து.

*கருத்து:*—இச்செய்யுள் இரசப்புகை செய்யும் வழியைச் சொல்லுகின்றது.

*சொ - ள்:*—அப்பால் - அதன் பிறகு, போம் - தீர்ந்து போகக்கூடிய, கிரந்திக்குப் புகை ஒன்று சொல்லக்கேள் - கிரந்தியாகிய விரண நோய்க்குப் போடும் ஒருபுகை மருந்து சொல்லக்கேள், புகழ் ஆன சூதம் ஒரு கழஞ்சு வாங்கி - வாதிகள், வயித்தியர்கள் முதலியவர்களாற் புகழப் படுவதான சுத்தி செய்த இரசம் ஒன்றே கால்வராகனெடை எடுத்து, வாமம் அப்பாக் காரீயம் கழஞ்சு கால் - அழகில்லாத காரீயம் காலே விசம் வராகனெடை எடுத்து, இரண்டும் ஒன்றாக மாட்டி பொடியாய்ச்செய்து - இவ்விரண்டையும் ஒன்றாகச் சேர்த்துப் பொடிசெய்து, தாமம்-(சிவபெருமானுக்கு) மாலையாக, பாவு - விரிந்தணிகின்ற, எருக்கம்வேர் சரியாய்க் கூட்டி - எருக்கம் வேர்ப்பட்டை ஒன்றரையே வீசம் வராகனெடையென்னுஞ் சரியளவாய்ச் (அத்துடன்) சேர்த்து, மூன்றுதினம் தாழ்வில்லா புகைபிடிக்க - மூன்று நாள்களுக்குக் குறையாமற் புகைபிடிக்க, தோம் அப்பா-யாதோர் தீங்கும் வராமல், கிரந்தியொடு சூலை போகும் - கிரந்தியும் அதிலுண்டாம் சூலையும் போம், துடியான ஒன்று மருந்து - அதைப்போக்க இது ஒரு உயர்ந்த மருந்தாம்.

புகை பிடித்தல்; கரி நெருப்பில் இந்தத் தூள் கொஞ்சம் போட்டாவது, இந்தத் தூளைச் சீலையில்

கொஞ்சமிட்டுத் திரியாக்கிக் கொளுத்தியாவது வரும் புகையை மூக்காடிட்டுப் பிடித்தல்.

தான் சாரியை, ஏகாரம் அசை. (சுரு)

---

## பேதிக்கு வாயுபுத்திரன்

சொல்லுகிறேன் பேதிக்கு வாயு புத்ரன்
சூதமொன்று லிங்கமொன்று கார மொன்று
வெல்லுகிறே னிந்துப்பு கடுக்காய் ரோணி
வெள்ளைக்காக் கணவேரும் வராகன் மூன்று
நல்லுகிறேன் வாளமது வராக னெட்டு
நற்பிரண்டைச் சாற்றாலே யரைப்பாய் சாமம்
வல்லுகிறேன் கடலைபோ லுருட்டிக் கொண்டு
வாகான விஞ்சிநீர் தன்னி லூட்டே.

கருத்து:—இச்செய்யுள் பேதிக்கு வாயுபுத்திரன் மாத்திரை செய்யும் வழியையும், துணை மருந்தையும் சொல்லுகின்றது.

சொ - ள்:—பேதிக்கு வாயு புத்ரன் சொல்லுகிறேன் - வாயு புத்திரன் என்னும் பேருள்ளதாகப் பேதியாவதற்கு ஒரு மாத்திரை சொல்லுகிறேன், (அதைக்கேள்) சூதம் ஒன்று லிங்கம் ஒன்று காரம் ஒன்று - சுத்திசெய்த இரசம் ஒருவராகனெடையும் இலிங்கம் ஒருவராகனெடையும் வெங்காரம் ஒருவராக னெடையும், வெல்லுகிறேன் - நான் மேற்கொண்டதென்கிற, இந்துப்பு கடுக்காய் ரோணி வெள்ளைக் காக்கணம் வேரும் வராகன் மூன்று - இந்துப்பு, கடுக்

காய்த் தோல், கடுகுரோகணி, வெள்ளைக் காக்கணை வேர் ஆகிய இவைகள் வகை ஒன்று மூன்று வராக னெடையும், நல்லுகிறேன் - சுத்தி செய்து உயர்ந்த தென்று சொல்லுகிற, வாளம் அது வராகன் எட்டு - வாளம் எட்டு வராக னெடையும், (ஆகிய எல்லா வற்றையும் கல்வத்திட்டு) நல்பிரண்டைச் சாற்றால் சாமம் அரைப்பாய் - நல்ல பிரண்டைச் சாற்றினால் ஒருசாம மரைத்து, வல்லுகிறேன் - வன்மையுடைய தென்கிற, கடலைபோல் உருட்டிக்கொண்டு - கடலை யளவு மாத்திரை செய்து நிழலில் உலர்த்தி, வாகு ஆன - பொருத்துணை மருந்துகளில் வலியுள்ளதான, இஞ்சி நீரில் ஊட்டு - இஞ்சிச் சாற்றில் இழைத்துக் கொடுப்பாய்.

வெல்லுதல் - மேம்படுதல், நல்லுதல் - உயர்தல், வல்லுதல் - வன்மையாதல். இம் மூன்றும் எச்சப் பொருளின. ரோணி குறைந்த சொல். தன், அது இசைநிறை. ஏகாரம் அசை. (௬௬)

தன்னிலே யோருருண்டை யிடுவா யாறற்
சாதகமாய்ப் பேதியது தானே காணும்
வெந்நீரி லிட்டாலும் பேதி யாகும்
மிளகுநீர் விட்டசனம் வேண்டி யுண்ணு
உன்னியே வரும்வாயு சுரநீர்க் கோவை
யுதாத்தி லுப்பிசமு மோடிப் போகும்
கன்னியராம்* பெண்களுக்குப் பெரும்பா டானல்
கனமான மருந்தொன்று கண்டு பாரே.

---

(பா - ம்.) *கன்னிகையாம்.

கருத்து:—இச்செய்யுள் பேதிக்கு வாயுபுத்திர மாத்திரையில்தீரும் நோய்களும், பத்தியமும், பெரும் பாட்டுக்கு மருந்து சொல்லுகிறேனென்பதும் கூறு கின்றது.

சொ - ள்:—ஒரு உருண்டை இடுவாயானல் - முன்சொன்ன துணைமருந்துடன் ஒரு மாத்திரை இழைத்துக் கொடுத்தால், பேதி சாதகமாய்க் காணும் - பேதி இயற்கையாக ஆகும், வெந்நீரில் இட்டாலும் பேதி ஆகும் - வெந்நீரிலிழைத்துக் கொடுத்தாலும் பேதியாகும், அசனம் மிளகு நீர் விட்டு வேண்டி உண் - மிளகுநீர்ச் சோறு விரும்பி உண்ணுவாய், உன்னியே - (வாயு பொருள்களை) எண்ணி உண்டதனல், வரும் வாயு - மேற்கொண்டு வந்த வாயுவும், சுரம் - சுரமும், நீர்க்கோவை - நீர்க் கோவையும், உதரத்தில் உப்பிசமும்-வயிறுப்பிசமும், ஓடிப்போகும் - விரைவிற்றீரும், (இனிக்) கன்னியர் ஆம் பெண்களுக்கு - கன்னிகைகளென்கிற பெண்க ளுக்கு, பெரும்பாடு ஆனல் - பெரும்பாடென்கிற நோய்வந்தால், கனமானமருந்து ஒன்று கண்டுபார் - (நான் சொல்லப்போகிற) ஒரு உயர்ந்த மருந்தைச் செய்துபார்.

தன்னிலே அந்தாதித் தொடக்கு. அது, தான் இசை நிறை. ஏகாரங்கள் அசைகள். (கூஎ)

## பெரும்பாட்டுக்கு மீன் பிட்டு

கண்டுபா ராவிரைவேர் குடிநீ ரிட்டுக்
கடாயத்தி லொருபடிநீர் கருத்தாய் வாங்கிக்
குண்டுசட்டி தனில்விட்டு வேடு கட்டிக்
குணமான நற்சாளை மீனை வாங்கிப்
புண்டுபோ காதபடி கஞ்சா வெல்லம்*
புத்துருக்கு நெய்யைவிட் டரைத்துக் கட்டி†
விண்டுபோ காதபடிக் கியாழ வேடு
மேல்வைத்துப் பிட்டவித்து விதமாய்த் தானே.

கருத்து:—இச்செய்யுள் பெரும்பாட்டுக்கு மீன் பிட்டு செய்யும் வழி கூறுகின்றது.

சொ - ள்:—பார் ஆவிரை வேர் குடிநீர் இட்டு - பூமிக்குள்ளிருக்கும் ஆவாரை வேரை இடித்துக் குடிநீர் செய்து, கடாயத்தில் - அக்குடி நீரில், ஒரு படி நீர் கண்டு கருத்தாய் வாங்கி - ஒரு படி நீரைக் கவலையாய்ப் பார்த்து எடுத்து, குண்டு சட்டிதனில் விட்டு வேடுகட்டி - ஒரு குண்டு சட்டியில் ஊற்றி அச் சட்டி வாய்க்கு வேடு கட்டி, குணம் ஆன - மேற் சொன்ன நோயைக் குணஞ்செய்வதான, நல்சாளை மீனைவாங்கி- உயர்ந்த சாளை மீனைக் கொண்டுவந்து, (அதற்கு) கஞ்சா வெல்லம் - கஞ்சா வெல்லம் இவ்விரண்டும் மீன் கொள்ளு மளவுக் கெடுத்து, புது உருக்கு நெய்யை விட்டு அரைத்து - அவ் விரண்டையும் புதி

(பா - ம்.) *வேலம். †கொண்டு.

தாய் உருக்கின பசு நெய் விட்டரைத்து, புண்டு போகாதபடி கட்டி - அம்மீன் புண்டு போகாதபடி அம்மீன் முழுமைக்கும்மேல் அப்பி, விண்டு போகாத படி - மேல் பூசின மருந்து உதிர்ந்து போகாவண் ணம், கியாழ வேடு மேல்வைத்து - கியாழ மூற்றிய சட்டியின்மேல் கட்டியுள்ள வேடுமேல் அம்மீனை வைத்து, பிட்டவித்து - பிட்டவிப்பதுபோல் வேக வைத்து, விதம் ஆய் - வரிசையாய்.

தான் இசைநிறை. ஏகாரம் அசை. (கூஅ)

விதமாக விரண்டுநா ழிகைதான் வெந்தால்
மேற்சட்டி திறந்தெடுத்து மீனை வாங்கிப்
பதமாக மேற்கவசந் தள்ளிப் போட்டுப்*
பாங்கான சிலாம்புமுள்ளு மகற்றி மைந்தா
நிதமாகப் பத்துநாள் கொடுத்தா யானுல்
நில்லாது பெரும்பாடு நீங்கிப் போகும்†
சதமாக வந்தியிலே கியாழங் கொள்ளும்
தண்மையென்ற ஆவாரைக் கியாழந் தானே.

கருத்து:—இச் செய்யுள் பெரும் பாட்டுக்கு மீன் பிட்டு செய்யும் வழியின் தொடர்ச்சியையும், தீரு நோயையும், மாலைக் குடி நீரையுஞ் சொல்லு கின்றது.

சொ - ள்:—இரண்டு நாழிகை விதம் ஆக வெந் தால் - இரண்டு நாழிகைகள் வரைக்கும் வகையாக

(பா - ம்) * வாங்கிப்போட்டு. † நின்றுபோகும்.

வெந்தால், மேல்சட்டி திறந்து எடுத்து மீனை வாங்கி - மேலே மூடியிருக்கின்ற சட்டியைத்திறந்து மீனை எடுத்து, மேற்கவசம் பதமா தள்ளிப்போட்டு - மீனுக்குச்செய்திருந்த மேல்மூடியை எடுத்துவிட்டு, பாங்கான சிலாம்புமுள்ளும் அகற்றி - பக்கங்களி லுள்ள சிலும்புகின்ற முள்ளை நீக்கி, நிதம் ஆக - தினந்தோறும், பத்துநாள் - பத்துநாள்வரைக்கும், மைந்து ஆ - (போய்விட்ட) வன்மை உண்டாக, கொடுத்தாய் ஆனால் - (தின்னும்படி) கொடுத்தால், பெரும்பாடு நில்லாது நீங்கிப்போகும் - பெரும்பா டென்னும் பெண்களுக்குண்டாம் இரத்தம்போக்கு நோயானது உடலில் இராமல் நீங்கிப்போய்விடும், அந்தியில் - மாலையில், சதமாகக்கொள்ளும் கியாழம் - விடாமற் குடிக்கவேண்டிய கஷாயமானது, தண்மை யென்ற - (மேகக்கூட்டுக்கு) தணிவைச் செய்வ தென்று சொல்லப்படுகிற, ஆவாரைக் கியாழம்தான் - ஆவாரம்பட்டைக் கியாழமேயாகும்.

தான், ஏ அசைகள். மைந்தா என்பதை மகனே என விளித்தலுமாம்.

விதம் - வகை. பதம் - பக்குவம். நிதம் - தினம். சதம் - மருந்துசாப்பிடும் வரைக்கும். (சுக)



## தாம்பிரபற்பம்

தானென்ற தாம்பிரத்தின் பற்பஞ் சொல்வேன்
தகடாதல் துட்டாதல் சுத்திசெய்து
கோனென்ற வெள்ளையொன்று வீர மொன்று
கோழிமுட்டைத் தோலொன்று கல்வத்திட்டு
வானென்ற வெருக்கம்பால் விட்டிட் டாட்டி
வளமாகக் கவசமிட்டுத் துட்டுக்கேதான்
ஊனென்ற சீலமண் மூன்றுஞ் செய்தே
யொருமுழத்திற் புளியமர மொன்று வாங்கே.

கருத்து:—இச்செய்யுள் தாம்பிரபற்பம செய்யும் வழியைக் கூறுகின்றது.

சொ - ள்:—தான் என்ற - தானே உயர்ந்ததென்று சொல்லப்படுகிற, தாம்பிரத்தின் பற்பஞ் சொல்வேன் - தாம்பிரபற்பஞ் செய்யும் வழியைச் சொல்லுவேன், (எப்படியென்றால்) தகடுஆதல் துட்டு ஆதல் சுத்திசெய்து - (தாம்பிரதகட்டையாவது துட்டையாவது சுத்திசெய்து, கோன்என்ற - (பாடாணங்களில்) உயர்ந்தவை என்று சொல்லப்படுகின்ற, வெள்ளை ஒன்று வீரம் ஒன்று - வெள்ளைப்பாடாணம் ஒரு எடையும், வீரம் ஒரு எடையும், கோழிமுட்டைத்தோல் ஒன்று - (குஞ்சுபொரித்த) கோழிமுட்டை ஓடு ஒரு எடையும், கல்வத்துஇட்டு - கல்வத்தில் போட்டு, வான்என்ற - (பற்பவகைகளுக்கு) உயர்ந்ததென்று சொல்லப்படுகிற, எருக்கம்பால் விட்டுஇட்டு ஆட்டி - எருக்கம்பால் விட்டரைத்து, துட்டுக்குவளம்

ஆகக் கவசம் இட்டு - வளப்பமாய் துட்டுக்குப்பூசி, ஊன் என்ற - (அச்செம்பு இருப்பதற்கு) உடல் போன்றதென்று சொல்லப்படுகிற, மூன்றுசிலைமண்ணும்செய்து - மூன்றுமண்சீலை ஒவ்வொன்றாய் உலர்த்தி உலர்த்திச்செய்து, புளியமரம் ஒன்று ஒரு முழத்தில் வாங்கு - ஒரு முழம் இருக்கும்படி ஒரு புளியங்கொம்பு கொண்டுவந்து.

ஏகாரங்கள் அசைகள்.

தான் - தனக்குத்தானே உயர்தல். இதை,

"பற்பமென்றால் தாமபிரமே பற்பமாகும்"

என்பதாலறிக. கோனும் வானும் தலைமை என்னும் பொருளின. ஊன் - உடல்.

துட்டுக்குப்பூசி என ஒன்றைக் கூறினும் முன்னர்சொன்ன தகட்டையும் உடன்கொள்ளவேண்டும்.

வாங்கியதைத் துளைநடுவி* லரைச்சாண் மட்டும்
வழியுள்ளே கவசம்வைத்து மண்சீலை செய்து
தாங்குபெறக் குழிவெட்டிக் கஜபு டத்திற்
றுக்கினுற் றவளம்போற் பற்ப மாகும்
ஏங்கியே திரியாதே யிந்தப் பற்பத்
தெட்டுவகைக் குன்மமுத லெல்லாம் போகும்
பாங்குபெறத் திரிகடுகிற் றேனில் வாழைப்
பழத்திலிடப் பலத்தவினை பறக்கும் பாரே.

---

(பா - ம்.) *நடுவாகத் துளையரை.

கருத்து:—இச்செய்யுள் தாம்பிர பற்பம் செய்யும் வழியின் தொடர்ச்சியும், தீரு நோயும், துணை மருந்தும் கூறுகின்றது.

சொ - ள்:—அதை வாங்கி - அந்தக் கொம்மை எடுத்து, நடுவில் அரைசாண் மட்டும் துளை - நடுவில் அரைச்சாண் நீளம் துளை செய்து, வழியுள் - அந்தத் துளையினுள், கவசம் வைத்து - கவசம் செய்த செம்மை வைத்து, மண்சீலை செய்து - (அக் கொம்பின் துளைக்கு ஆப்படைத்து) மண்சீலை செய்து, தாங்குபெற - அந்தக் கொம்பு பிடிக்கும் அளவு, குழி வெட்டி - பள்ளந் தோண்டி, கஜபுடத்தில் தாக்கினால் - நூறு எரு அடுக்கி அவற்றின் நடுவில் இக் கொம்மை வைத்துப் புடம்போட் டாறின்பின் எடுத்தால், தவளம்போல் பற்பம் ஆகும் - வெண்மையான பற்பமாகும், ஏங்கித் திரியாதே - இந்தப் பற்பத்தை வைத்துக் கொண்டு இன்னது செய்வதென்று தெரியாமல் திரியவேண்டாம், பாங்கு பெற - (நோய்கள் நீங்கி உடல்) நன்மையடைய, திரிகடுகில் - திரிகடுகின் சூரணத்திலாவது, தேனில் - தேனிலாவது, வாழைப் பழத்தில் - வாழைப்பழத்திலாவது, இட - கலந்து கொடுத்தால், இந்தப்பற்பத்து-இந்தப் பற்பத்தினால், எட்டு வகைக் குன்மம் முதல் எல்லாம் போகும் - எட்டு வகையான குன்மங்கள் முதலாகச் சொல்லப் பட்ட மற்றெல்லா நோய்களும் நீங்கும், பலத்த வினை பறக்கும் - பெரிய நோய்களும் தீரும், பார் - இதைக் கையாடிப்பார்.

ஏகாரங்கள் மூன்றும் அசைகள். இதன் அளவு, நாளளவு, பத்தியம் முதலியவை சொல்லாமையால் வழக்கப்படி கொள்ளவேண்டும்.

"புளியொன்று தவிர வெல்லாம் புசிக்கினு நவையு ருதை
இளைபெரு நெருப்புக் கீர மில்லையென் பதுபோ லாகும்
அளைமுசர் லிகுசங் காடி யாமலி யடாது பாகற்
சுளையர மகட்ப மூக்நெய் சுதைசருக் கரைமா நன்றே"

என்பதால் இதன் மருந்து பத்திய முணர்க. (எக)

பாரப்பா ஏீற்றுவகை யறிய வேண்டும்
பாங்கான பழக்கமன்றோ பழகவேண்டும்*
காரப்பாச் செபம் வேண்டும் தவமும் வேண்டும்
கன்மவினை தீர்ப்பதற்குக் கனிவு வேண்டும்†
சீரப்பா னூல்வேண்டுந் தைரியம் வேண்டும்
செய்பாகங் கைபாகந் தீக்கை வேண்டும்
ஊரப்பா வேகமூ லிகையின் போக்கு
முத்தமமாய்ச்‡ சொன்னேனு னிருநூற் றைந்தே.

கருத்து:—இச் செய்யுள் மருத்துவன் இருக்க வேண்டும் முறைகளையும், இருநூற் றைந்து என்னும் பற்ப முறை நூலில் ஏக மூலிகையினாற் பற்பஞ் செய்யும் முறைகள் சொன்னேனென்பதனையும் சொல்லுகின்றது.

சொ - ள்:—பார் - இவ்வுலகத்தில். அப்பால் - (மூலிகை வகைகளையும், கடைச் சரக்கு வகைகளையு

---

(பா - ம்.) *பழக்கமல்லோ தெரியவேணும். †கவனம் வேண்டும். ‡முத்தமனே,

முணர்ந்து) பின்னர், நீற்று வகை அறிய வேண்டும் - பற்பஞ் செய்யும் வழிகளைத் தெரிந்துகொள்ள வேண்டும், கார் அப்பா - குற்றமற்ற, செபம் வேண்டும் - இறைவனை உச்சரித்தல் வேண்டும், தவமும் வேண்டும் - அதற்குரியமானத தவம் செய்ய வேண்டும், கன்மவினை தீர்ப்பதற்குக் கனிவு வேண்டும் - கர்ம சாந்தி செய்து நோய் தீர்க்கக் கருணை வேண்டும், அப்பால் - பிறகு, சீர்-சிறந்த, நூல் வேண்டும்-ஆயுள் மறையில் ஆராய்ச்சி வேண்டும், தைரியம் வேண்டும் - அந்நூலின்படி செய்ய மனவூக்கம் வேண்டும், செய் பாகம் கைபாகம் வேண்டும் - மருந்து செய்து முடிக்கும் வழியும், கைப் பழக்கமும் வேண்டும், தீக்கை வேண்டும் - சுத்திமுறை நன்றாயுணர வேண்டும், (இவ்வளவும் உரிய மருத்துவர்களுக்கே) ஊர் - இவ்வுலகத்தில், ஏக மூலிகையின் போக்கும் - ஒரு மூலிகையினுற் பற்பம் பண்ணும் வழியையும், அபா இருநூற்றைந்து - அந்த இருநூற்றைந்து விருத்தப் பாவால் ஒரு நூலை, நான் உத்தமம் ஆய் சொன்னேன் - நான் மிக நன்றாய்ச் சொன்னேன்.

ஓ, ஏ அசைகள். நூல் ஆயுள் மறை. இப்போல் ஒரு நூல் நன்கிலதேனும் உடற் காப்பு மருந்து நூற்களெல்லாம் திரண்ட பிண்டமே ஆயுள் மறைகளெனக் கொள்வ ரறிஞர்.

செய் பாக கைபாகங்கள் நன்குறின் சிறுமருந்துகளும் பெருமருந்துகளாம். இல்லையேல் பெருமருந்துகளும் நஞ்சாமென்பர் மருத்துவ அறிஞர். அதை,

"பக்குவபா கத்தையுறு பஞ்சின்மருந் தும்பிறழ
பக்குவபா கத்துப் பருமருந்தும்—மெய்க்குறுங்கால்
அக்கால மும்பருணு மாழிமருந் துஞ்சேடன்
கக்கால மும்பொருந்துங் காண்"

என்பதா லறிக.

கார் - குற்றம். அப்புதல்-பொருந்தல். ஊரப்பா என்பதை ஊர்+அ+பா எனப் பிரிக்க. அபா - அந்தப் பாக்கள். (எ௨)

---

## ஒரு மூலிகைப் பற்பக்கரு

அஞ்சான விருநூற்றிற் பற்பஞ் சொன்னேன்
அதற்கேற்ற குருமுறையை யறிந்தோ னில்லை
மஞ்சான மேகமது வருடித் தாற்போல்
வயித்தியநூ லிரண்டிலக்கம் வளமாய்ப் பாரு
துஞ்சாம லேகமூ லிகையின் போக்கு
சொன்னபடி யாடுதற்குக் கருவைச் சொல்வேன்
தஞ்சான பூநீறு வீரம் பூரம்
சாரமொன்று காரமொன்று தாயு மொன்றே.

கருத்து:—இச்செய்யுள் இருநூற்றஞ்சு என்னும் நூலில் இன்னின்ன சொல்லப்பட் டிருக்கின்ற தென்றும், அவை முடிக்கச் சாதனமும் சொல்லுகின்றது.

சொ - ள்:—ஆன இருநூற்று அஞ்சில் பற்பம் சொன்னேன் - தக்க இருநூற்றைந்து பாடலில் பற்

பம் செய்யும் வழியைச் சொன்னேன், அதற்கு ஏற்ற குருமுறையை அறிந்தோன் இல்லை - அப் பற்பங்கள் முடிப்பதற்குத் தக்க குருமுறையை உணர்ந்தவனோ இல்லை, மஞ்சு ஆனமேகம் அது வருடித்தாற்போல் வயித்தியநூல் இரண்டிலக்கம் - சூல் கொண்ட மேக மானது பெருமழை பெய்தாற்போலச் (சொல்லப் பட்ட) வயித்திய நூல்கள் இரண்டிலக்கஞ் செய்யு ளாம், வளமாய்ப்பார்-இவைகளை நன்றாய் ஆராய்ந்து பார், ஏக மூலிகையின் போக்கு - ஒரு மூலிகையில் பற்பமாம் வழி, துஞ்சாமல் - முட்டுப் படாமல், சொன்னபடி ஆடுதற்கு -(அவ்விரு நூற்றைந்தில்) சொல்லப்பட்டபடி செய்து கையாடுவதற்கு, கருவை சோல்வேன் - சாதனத்தைச் சொல்லுகிறேன், தஞ் சம் ஆன பூநீறு வீரம் பூரம் சாரம் ஒன்று காரம் ஒன்று தாயும் ஒன்றே - ஆதரவான பூநீறு, வீரம், பூரம், நவாச்சாரம் வெங்காரம் இவைகள் ஒவ்வொரு எடையும் தாய் என்கிற அவ்வச்சரக்கும் ஒரு எடையுமாம்.

உகரம் சாரியை. ஏகாரம் அசை. அஞ்சு ஆன இருநூறு - பற்பவிதி இருநூற்றைந்து. மஞ்சு மேகம் ஒரு பொருளன. கரு - காரணம், தஞ்சம் - பற்றுக் கோடு, ஆதரவு.

தாய் என்பது அவ்வச் சரக்குகள். பற்பம் செய் யப்பட வேண்டிய சரக்கு. (எ௩)

தாயுமொன்று வெடியுப்பு தார* மொன்று
தவளமென்ற வெள்ளையொன்று தானே கூட்டிப்
பாயுமென்ற வெருக்கம்பால் விட்டிட் டாட்டிப் [துக்
பற்பமென்ற வகைக்கெல்லாங் குருவைச் சேர்த்
காயுமென்ற கவசமிட்டுச் சீலை செய்து
கனமான வோட்டிலிட்டு மண்ணுஞ் செய்து
தீயுமென்ற நூற்படிக்குப் புடத்தைப் போடு
சிவசிவா விருநூறுந்† திடந்தான் பாரே.

கருத்து:—இச்செய்யுள் பற்பவிதி இருநூற்றைந்தில் சொல்லப்படும் பற்பங்களை முடிக்கும் குரு மருந்தின் தொடர்ச்சி கூறுகின்றது.

சொ - ள்:—வெடியுப்பு ஒன்று தாரம் ஒன்று தவளம் என்ற வெள்ளை ஒன்று - வெடியுப்பு ஒரு எடையும், தாளகம் ஒரு எடையும், வெள்ளைப் பாடாணம் ஒரு எடையுமாக, கூட்டி - சேர்த்து, பாயும் என்ற - மருந்துகளில் நுழையுமென்று சொல்லப் பட்ட, எருக்கம்பால் விட்டு இட்டு ஆட்டி - எருக்கம் பாலைவற்ற வற்ற விட்டரைத்து, பற்பம் என்ற வகைக்கு எல்லாம் குருவைச் சேர்த்து - பற்பம் செய்ய வேண்டிய மருந்துகளுக்கெல்லாம் இக்குருமருந்தைப் பூசி, கவசம் இட்டு-நன்றாய் அச்சரக்கை மூடி, காயும் என்ற சீலைசெய்து - ஒவ்வொன்றாகக் காயவைத்து ஏழு சீலைசெய்து, கனமான ஓட்டிலிட்டு மண்ணுஞ் செய்து - கனத்த ஓட்டிலிட்டு மேல்மூடி மண்சீலை

(பா - ம்.) *தருசு. †இருநூற்றைந்து.

செய்து, தீயும் என்ற - தீ இவ்வளவாகும் என்று சொல்லப்பட்ட, நூல்படிக்கு- நூலில் சொல்லப்பட்ட விதிப்படி, புடம்போடு - புடம்போடுவாய், இருநூறும் திடம்பார் - இருநூற்றைந்து என்னும் சொல்லப்பட்ட முறைகள் திடமாய் முடிவனவேயாம் அதை நன்றாய்ச் செய்துபார்.

தாயும் - அந்தாதித் தொடர். தான் இரண்டும் சாரியைகள் ஏகாரம் இரண்டும் அசைகள். சிவசிவா அடுக்கு. நன்மைக்குறி. அன்றி, ஆணையுமாம். (எச)

## பூரணாதி லேகியம்

திடமான பூரணலே கியந்தா னென்று
செப்புகிறேன் புலத்தியனே தெளிவாய்க் கேளாய்
நடமான சடைக்கஞ்சா பழுது* பார்த்து
நன்றாகப் பதினைந்து பலந்தா னாகும்
குடமான பாண்டத்தி லிடித்துப் போட்டுக்
குளிர்ந்தசலம் பதினாறு படியும் விட்டு
விடமாறக் காய்ச்சியே யெட்டொன் றாக்கி
மேலான கியாழத்தை யிருத்தி டாயே.

கருத்து:—இச்செய்யுள் பூரணாதி லேகியஞ்செய்யும் வழிகூறுகின்றது.

சொ - ள்:—புலத்தியனே - புலத்தியனென்னும் மாணாக்கனே! திடம் ஆன - உடலுக்கும், அறிவுக்

(பா - ம்.) *திறமாய்.

கும் வன்மையைக் கொடுக்கக் கூடியதான, பூரண் லேகியம் ஒன்று செப்புகிறேன் - ஒரு பூரணுதி லேகியஞ் சொல்லுகிறேன், தெளிவாய்க் கேளாய் - நீ கூர்மையாய்க் கேட்பாய், நடம் ஆன - சித்சபை நடனங் காணக்காரணமான, சடைக்கஞ்சா நன்றாய் பழுது பார்த்து - சடைக்கஞ்சா நன்றாகக்குற்ற நீக்கி, பதினைந்து பலம் ஆகும் - பதினைந்து பலம் ஒரு முறைக்காகு மென்று எடுத்து, குடம் ஆன பாண்டத்தில் இடித்துப்போட்டு - ஒரு குடைவு சட்டியில் இடித்துப் போட்டு, குளிர்ந்த சலம் பதினறுபடி விட்டு - தண்ணீர் பதினறு படிவிட்டு, விடம் மாறக் காய்ச்சி எட்டு ஒன்று ஆக்கி - கொடுமை யெல்லாம் அடங்க இரண்டுபடியாகக் காய்ச்சி, மேலான கியாழத்தை இருத்திடாய் - உயர்ந்த குடிநீரை வடிகட்டிக் கொள்வாய்.

தான், உம் சாரியைகள், ஏகாரங்கள் அசைகள். திடம் - வன்மை. நடம் - நடிப்பு. குடம் - சட்டி, விடம் - குற்றம். (எரு)

இருத்திட்ட கியாழத்திற் றேங்காய்ப் பாலு
மிளநீருங் கருப்பஞ்சா றுவின் பாலும்
மருத்திட்டம் வகைக்குமொரு படிதான் விட்டு
வளமான வாவினெய் படியும் விட்டுச்
சிறுத்திட்ட கமலம்போ லெரிக்கும் போது
திரண்டுவரும் பதத்திநெய்யை வடித்துக் கொண்டு
பருத்திட்ட வாலம்விதை யுருவி வித்தும்
பருத்திவிதைப் பருப்புடனே யாவிரையின் வித்தே.

கருத்து:—இச்செய்யுள் பூரணாதி லேகியம் செய்யும் வழியின் தொடர்ச்சி கூறுகின்றது.

சொ - ள்:—இருத்திட்ட கியாழத்தில்-அவ்வாறு வடித்துக் கொண்ட (இரண்டுபடி) குடிநீரோடு, தேங்காய்ப்பாலும் இளநீரும் கருப்பஞ்சாறும் ஆவின்பாலும்-தேங்காய்ப்பாலும் இளநீரும் கரும்புசாறும் பசுவின் பாலும், வகைக்கு ஒருபடி மருதிட்டம் விட்டு - வகைக்கு ஒருபடி என்னும் அளவு பொருந்தும்படி விட்டு, வளம் ஆன ஆவின் நெய் படியும் விட்டு - நல்ல வன்மையான பசுவின் நெய் ஒருபடியும் விட்டு, (எல்லாவற்றையும் ஒன்றாய்ச் சேர்த்து) சிறுத்திட்ட கமலம்போல் எரிக்கும்போது - சிறிய கமலாக்கினியாக எரிக்குஞ் சமயத்தில், திரண்டுவரும்பதத்தில் நெய்யை வடித்துக் கொண்டு - சேர்ந்து பக்குவம் வருகிற காலத்தில் அந்த நெய்யை வடித்து வைத்துக் கொண்டு, பருத்திட்ட ஆலம் விதையும் உருவி வித்தும் பருத்தி விதைப்பருப்புடன் ஆவிரையின் வித்து- பெரிய ஆலம்விரையும் நாயுருவி விரையும் பருத்திக் கொட்டைப் பருப்பும் ஆவாரையின் விரையும்.

உம், தான், அம்முக்கள், ஏ அசைகள். மருவு - எனற்பாலது மரு என நின்றது. மரு - பொருந்தல். திட்டம் - அளவு. பருத்தல் - விரிதல். (எசு)

வித்தான முருங்கைவித்தும் பூனைக் காலி
வித்துடனே யமிர்தசர்க் கரைகி ராம்பு
பற்றான சாதிக்காய் பத்திரி யேலம்
பருமிளகு வால்மிளகு லவங்கப் பத்திரி

மத்தான கோரோசனை கோட்ட மாஞ்சில்
வாலுழுவை சிறுநாகங் குங்கு மப்பூ
சத்தான திரிகடுகு திரிப லாதி
தாளிசமுஞ் சீரகமும் வெந்தயமுந் தானே.

கருத்து:—இச்செய்யுள் பூரணதிலேகியஞ் செய்யும் வழியின் தொடர்ச்சி கூறுகின்றது.

சொ - ள்:—வித்து ஆன - விரைவகைகளிற் சேர்ந்தவைகளான, முருங்கைவித்தும் பூனைக்காலி வித்தும் - முருங்கைவிரையும் பூனைக்காலிவிரையும், அமிர்த சர்க்கரை கிராம்பு - சீந்தில் சர்க்கரையும் இலவங்கமும், பற்றுஆன சாதிக்காய் பத்திரி ஏலம் பருமிளகு வால்மிளகு லவங்கப்பத்திரி - துவர்ப்பான சாதிக்காயும் சாதிப்பத்திரியும் ஏலரிசியும் கெட்டிமிளகும் வால்மிளகும் லவங்கப்பத்திரியும், மத்துஆன - மத்தமான, கோரோசனை - கோரோசனையும், கோட்டம் மாஞ்சில் வாலுழுவை சிறுநாகம் குங்குமப்பூ-கோஷ்டமும் சடாமாஞ்சிலும் வாலுழுவையரிசியும் சிறுநாகப்பூவும் குங்குமப்பூவும், சத்து ஆன - காரமுள்ளவைகளான, திரிகடுகு திரிபலாதி - சுக்கும் மிளகும் திப்பிலியும் கடுக்காய்த்தோலும் தான்றிக்காய்த்தோலும் நெல்லிவற்றலும், தாளிசமும் சீரகமும் வெந்தயமும் - தாளிசபத்திரியும் சீரகமும் வெந்தயமும்.

தான், ஏ அசைகள்.

பற்றுதல் - துவர்ப்பு. மத்து-மத்தம் என்பதன் குறை, வன்மை. சத்து - கார்ப்பு. (௭௭)

வெந்தயமும் நிலப்பனைவேர் நிலசர்க் கரையும்
வெட்டிவேர் விலாமிச்சு முந்திரிபே ரீந்து
சந்தயமாய் நினையாதே சாரப் பருப்பு
சதுரான குரோசானி கசக சாவும்
இந்தவகைக் கோர்கழஞ்சு வறுத்துத் தூளாய்
இடித்துமே வடிகட்டி வைத்துக் கொண்டு
முந்தியதோர் பனங்கள்படி யிரண்டுக் குள்ளே
மூட்டுவாய் பனைவெல்ல நல்லவெல்ல மாமே.

கருத்து:—இச்செய்யுள் பூரணாதிலேகியம் செய்யும் வழியின் தொடர்ச்சி கூறுகின்றது.

சொ - ள்:—வெந்தயமும் - முன்சொன்னவெந்தயமும், நிலப்பனைவேர் நிலசர்க்கரையும் - நிலப்பனங்கிழங்கும் பூசர்க்கரைக் கிழங்கும், வெட்டிவேர் விலாமிச்சு முந்திரி பேரீந்து - வெட்டிவேரும், விலாமிச்சவேரும் தீவதாட்சிப்பழமும் பேரீச்சம்பழமும், சாரப்பருப்பு - சாரப்பருப்பும், சதுரான - வெற்றியுடையதான, குரோசானி கசகசாவும் - குரோசானி ஓமமும் கசகசாவும், சந்தயம் ஆய் நினையாது - சந்தேகமாகக் கொள்ளாமல், இந்த வகைக்கு ஓர் கழஞ்சு - இந்தச் சரக்குகளையெல்லாம் வகை ஒன்றுக்கு ஒன்றேகால் வராகனெடைவீதம் எடுத்து, வறுத்து - இளவறுப்பாகவறுத்து, தூளாய் இடித்து வடிகட்டி வைத்துக்கொண்டு - தூளிடித்து வஸ்திர

காயம் பண்ணி வைத்துக்கொண்டு, மூந்தியது ஓர் - உயர்ந்ததாகிய ஒரு, பனங்கள் இரண்டு படிக்குள் பனைவெல்லம் நல்லவெல்லம் மூட்டுவாய் - இரண்டுபடி பனங்கள்ளை ஒரு சட்டியில் ஊற்றி அதில் பின்னர்க் காணுவதுபோலப் பனைவெல்லத்தையும் கரும்பு வெல்லத்தையுஞ் சேர்ப்பாய்.

ஏகாரங்கள். உம் அசைகள், வெந்தயம் அந்தாதித் தொடர். (எஅ)

வெல்லமென்ற வகையொன்று பலமிரண்டாய்
விட்டதிலே கரைத்திடுவா யடுப்பி லேற்றிச்
சொல்லவென்றாற் பாகுபதம் வருமந் நேரம் [தூளும்
சூரணத்தைக் கொட்டியொன்றாய்க் கஞ்சாத்
மல்லென்ற புடந்தீர்ந்த பொடியாய்ச் சேர்த்து
வளமான பாகதனிற் றாவிக் கிண்டு
வில்லென்ற முன்னுரைத்த கஞ்சா நெய்யை
விட்டிடுவாய் காற்படியு மிஞ்சா வாறே.

கருத்து:—இச்செய்யுள் பூரணாதிலேகியஞ் செய்யும் வழியின் தொடர்ச்சி கூறுகின்றது.

சொ - ள்:—வெல்லம் என்றவகை யொன்று - வெல்லம் என்று சொல்லப் பட்டவைகளில் ஒவ்வொன்றுக்கு, இரண்டு பலமா-இவ்விரண்டு பலமாக, அதில் விட்டு கரைத்திடு - அந்தக் கள்ளில்போட்டுக் கரைத்து, வாய் - தக்க, அடுப்பில் ஏற்றி - அடுப்பில் வைத்து, சொல்ல என்றால் - பிறகு செய்வதென்ன சொல்லுக என்று கேட்டால், பாகுபதம் வரும் அநே

ரம் - அந்தப் பனங்கள்ளின் பாகு பதமாய் வரும் அந்தச் சமயத்தில், சூரணத்தை - சூரணத்தையும், மல் என்ற - வருத்தப் படுத்துவதென்று சொல்லப் பட்ட, கஞ்சா தூளும் - கஞ்சா சூரணத்தையும், புடம் தீர்ந்த பொடியாய்-ஒன்பது புடந்தீர்ந்த பொடியாய், ஒன்றாய் - ஒரு பலமாய் எடுத்து, சேர்த்து - ஒன்றாய்ச் சேர்த்து, வளம் ஆனபாகு அதனில் தூவி கிண்டு-வளப்பம் பொருந்திய மேற்படி பாகில் தூவிக் கிளறுவாய், (அப்படி கிளறும் போது) வில் என்ற - விளக்கமுற்றதென்று சொல்லப்பட்ட, முன் உரைத்த கஞ்சா நெய்யை கால்படியும் மிஞ்சா ஆறு விட்டிடுவாய் - முன் சொன்ன கஞ்சா நெய் கால்படிக்கு அதிகப் படாமல் விடுவாய்.

ஏகாரங்கள் அசை. மல் - வருத்தம், வில் - விளக்கம். (எகூ)

மிஞ்சாமற் றேனிறைமா காணி விட்டு
வெள்ளைநிறக் கோழிமுட்டை யைந்த வித்து
மஞ்சான வுட்கருவை யுதிர்த்துத் தூவி
வளர்பஞ்ச தாரையைந்து பலமும் போட்டுப்
பஞ்சான மெழுகுபோ லெடுத்துப் பீங்கான்
பத்திரமாய்ச் சுருண்டைக்கா யளவு கொள்வாய்
நெஞ்சான யோகத்தை முடிக்கும் லேகியம்
நீட்டினல் மேகமெல்லாம் நீங்கிப் போமே.

கருத்து:—இச்செய்யுள் பூரணாதி லேகியஞ்செய்யும் வழியின் தொடர்ச்சியும், சில தீருநோயும் பெருமையும் கூறுகின்றது.

சொ - ள்:—தேன் மாகாணி நிறை மிஞ்சாமல் விட்டு - தேன்மாகாணிப்படி அளவுக்கு அதிகப் படாமல் விட்டு, வெள்ளை நிறம் கோழி முட்டை ஐந்து அவித்து - வெண்மையான கோழிமுட்டை ஐந்து தண்ணீரிலிட்டு வேகவைத்து, மஞ்சு ஆன உள்கருவை உதிர்த்து தூவி - அம்முட்டையின் உள்ளேயிருக்கின்ற மஞ்சள் கருவை உதிர்த்துத் தூவி, வளர்பஞ்ச தாரை - உயர்ந்த நாட்டுச் சர்க்கரை, ஐந்து பலம் போட்டு - ஐந்து பலம்போட்டு, பஞ்சு ஆன மெழுகு போல் பீங்கான் பத்திரமாய் எடுத்து - இளகிய மெழுகுபோல் வருநேரத்தில் பீங்கானில் பத்திரமாய் எடுத்து வைத்து, சுருண்டைக் காய் அளவு கொள்வாய்-சுண்டைக்காயளவு சாப்பிடு வாய், (இது) நெஞ்சு ஆன - மனத்தால் செய்யப்படுவதான, யோகத்தை முடிக்கும் லேகியம் - யோகத்தைக் கைகூடச் செய்யும் லேகியமாகும், (இதை) நீட்டினால் - கொடுத்தால், மேகம் எல்லாம் நீங்கிப் போம் - மேக வெட்டைகளெல்லாம் நீங்கிவிடும்.

உம், ஏ அசைகள். மஞ்சள் மஞ்சாயிற்று. பஞ்சானமெழுகு என்றது மெழுகின் இளம் பக்குவத்தை. நீட்டுதல் - கொடுத்தல். (அய)

நீங்குமே மூலமுதல் வாயு பித்தம்
நிமிடத்திற் சுரமாற னீங்கிப் போகும்
பாங்குபெறத் தேகமுமே காந்தி யாகும்!
பாழாகப் போகாமல் விந்து கட்டும்

தீங்கில்லா திம்மருந்தை யோகத் துக்காத்
திறமாக வயித்தியநூ லெண்ப துக்குள்
ஆங்கமாம் பூரணாதி லேகியமுஞ் சொன்னேன்
அறுநூற்றிற் காமகே சரியென் றேனே.

கருத்து:—இச்செய்யுள் பூரணாதி லேகியத்தால் தீருநோய்களையும் இந்நூலில் அது சொன்னேன் என்பதையும், பாண்டவைப்பு அறுநூற்றில் காமகேசரி குளிகை சொன்னேன் என்பதையும் சொல்லுகின்றது.

சொ - ள்:—மூலமுதல் வாயுபித்தம் நீங்கும் - மூலவாயு முதலாகச்சொல்லப்பட்ட வாயுக்களெல்லாமும் பித்தங்களும் தீரும், மாறல் சுரம் நிமிடத்தில் நீங்கிப் போகும் - நாள்மாறி வருகின்ற சுரங்கள் இதை உண்ட கொஞ்ச நேரத்திற்குள் தீரும், தேகம் - உடம்பானது, பாங்கு பெற - நற்றன்மை யடைவதால், காந்தி ஆகும் - பளபளப் புண்டாகும், விந்து பாழாகப் போகாமல் கட்டும் - விந்துகெட்டுப் போகாவண்ணம் அதைக் கட்டும், இமருந்தை - இந்த லேகியத்தை, தீங்கு இல்லாது - யாதொரு கெடுதியுமில்லாதபடி, யோகத்துக்கா - யோகஞ்செய்து முடிப்பதற்காக, வயித்தியநூல் எண்பதுக்குள் ஆங்கம் ஆம் பூரணாதிலேகியமும் திறம் ஆக சொன்னேன்-மருந்துநூலாகிய பின் எண்பதுக்குள் ஒரு உயர்ந்த உறுப்பாகிய பூரணாதிலேகியத்தை நன்றாய்ச் சொன்னேன், அறுநூற்றில் காமகேசரி என்றேன்-பாண்ட வைப்பு

அறுநூற்றில் காமகேசரி என்ற குளிகை சொன்னேன்.

ஏகாரங்களும், உம்மும் அசைகள். யோகத்துக்கா என்பதில் ஈறுதொகுத்தல்.

யோகத்துக்காகப் பின் எண்பதில் பூரணாதி லேகியமும், பாண்டவைப்பு அறுநூற்றில் காமகேசரி குளிகையும் சொல்லப்பட்டன எனக் கொள்க. (அக)

காமகே சரியுரைத்தேன் குண்ட செய்து
கடைந்தெடுக்கும் வகைசொன்னேன் கற்பத் துக்கு
வாமபூ சனைசொன்னேன் தீக்கைக் குள்ளே
வளமான சக்கரங்கள் மாறல் சொன்னேன்
நேமகமாய் வாதமிரு நூறுஞ் சொன்னேன்
நீற்றினத்தில் முப்பூவைம் பதுவுஞ் சொன்னேன்
நாமகளாய் வந்தென்றன் றுயார் சொல்ல
நன்றான ஞானமொரு பத்து நூறே.

கருத்து :—இச்செய்யுள் இன்னின்ன நூல்கள் சொன்னேனென்றும், அவற்றில் இன்னின்ன சொல்லப்பட் டிருக்கின்றனவென்றுஞ் சொல்லுகின்றது.

சொ - ள்:—கற்பத்துக்கு - கற்ப சாதனையின் பொருட்டு, குண்டசெய்து கடைந்தெடுக்கும்வகை சொன்னேன் - சட்டி ஒன்று செய்துவைத்து அதில் பல மருந்துகள் கூட்டிக் கடைந்தெடுக்கும் பிரிவுகளைச் சொன்னேன், தீக்கைக்கு உள் - தீக்கைவிதி என்னும் இருநூறு பாடல்கள்கொண்ட நூலில், வாம

பூசனை வளமான சக்கரங்கள் மாறல் சொன்னேன் - தேவி நாற்பத்து முக்கோண பூசையையும் வளமான மற்ற சக்கரங்கள் மாறும் பிரிவுகளையும் சொன்னேன், நேமகம் ஆய்வாதம் இருநூறுஞ் சொன்னேன் - இரு நூறு பாடல்களாக வாதசூத்திரம் இருநூறு என்னும் நூலை விதியாய்ச் சொன்னேன், முப்பூநீற்றினத்தில் ஐம்பதுவும் சொன்னேன் - முப்பு செய்யும்வகையாக ஐம்பது பாடல்களால் ஒரு நூல் சொன்னேன், (அது முப்பு ஐம்பது) என் தாயார் - என் தாயாகிய இறைவியானவள், நாமகள் ஆய் வந்து சொல்ல-சரஸ்வதிபோல என் நாவில் குடியிருந்து சொன்னதின் மேல், நன்று ஆன - உயர் வழியதான, ஞானம் ஒரு பத்து நூறு சொன்னேன் - ஞானகாண்டம் என்னும் நூலொன்று ஆயிரம் பாடல்களாற் சொன்னேன். (அஉ)

ஏகாரம் இரண்டு தன் அசைகள்.

தீக்கை இருநூற்றுக்குள் சொல்லப்பட்ட வாமபூசனையாகிய நாற்பத்து முக்கோணமானது கொங்கணர் கடைக்காண்டம் ஐந்நூறின்றிப்போட முடியாதென்றுணர்க.

ஞானமென்ன யோகம்விட் டா லதுவே ஞானம்
நாலைவிட்டால் யோகமென்ன மரண யோகம்
பானமென்ன ரசத்தைவிட்டாற் சுராபா னந்தான்
பகரரிய நூலைவிட்டாற் பழிபா வந்தான்

கோனமென்ன வழலைவிட்டாற் குடல்வா தந்தான்
குடல்வாதம் பேதமல்லால் குணமா காது
கானமென்ன விந்நூலெண் பதையுந் தொட்டாற்
காசினியி லவன்யோகி கடைதான் முற்றே.

கருத்து:—இச் செய்யுள் இன்னின்ன வற்றை விடக்கூடாது என்பதையும், இவ்வெண்பதின் பெருமையையும் கூறுகின்றது.

சொ - ள்:—ஞானம் என்ன - ஞான மென்றால் என்னவென்று கேட்டால், யோகம் விட்டால் அதுவே ஞானம் - யோகஞ் செய்து கைவந்த பிற்படியே ஞானமாகும், நாலைவிட்டால் - நாற்பாதங்களின் விதி முறைகளை விட்டு விட்டால், (பிறகு செய்யும்) யோக மென்ன மரண யோகம் - யோகமாவது பயனற்ற யோகமாகும் ஆகையால் அது மரண யோகமேயாம், ரசத்தைவிட்டால் பானம் என்ன - இரசத்தை யடக்கிக் கையாடாமல் செய்யும் பானம் என்ன பானம் என்றால், சுரா பானந்தான் - கள் குடியே யாகும், பகர் அரிய நூலைவிட்டால் பழி பாவந்தான்-சொல்லுதற்கரிய நூல்களைவிட்டுச் செய்தால் பழிப்பும் பாவமுமே உண்டாவனவாம், கோனம் என்ன வழலைவிட்டால்-மற்ற பக்குவங்களால் முடிக்கப்பெறும் வாதங்களே உயர்வாவனவா மென்றெண்ணி முப்புக் காரணத்தை விட்டுசெய்யப்படும்வாதம், குடல் வாதம் தான் - குடல் வாதம் போன்றதாகும், குடல் வாதம் பேதம் அல்லால் குணம் ஆகாது-குடல் வாதமானது

மாறி மாறிப் பெருகுவதே யன்றித் தீர்ந்து நலமா காது, காரணம் என்ன-பக்குவ காலத்தில் மணம்போல எண்ணி, எண்பது இந்நூல் தொட்டால் - எண்பது பாடல்களா லாகிய இந்த நூலைக் கைவிடாமல் இதின் படி செய்வானானால், அவன் - அப்படி செய்பவன், காசினியில் - இந்நிலவுலகில், யோகி-யோக முடித்தவ னாவான், கடை முற்று - இத்துடன் பின் எண்பது என்னும் நூல் செய்யப்பெற்று நிறைவேறிற்று.

யோகி என்றதற்கு வாதத்திற்கு வேண்டுவன வானவும் மருத்துவத்திற்கு வேண்டுவன வானவு மான மருந்துகளின் கலப்புத் தொழிலில் கைவந்தவ னாவான் எனக்கூறலு மொன்று.

தான் சாரியை. ஏ அசை. (அஙு)

# முறைகளின் அட்டவணை

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

சிறுமணவூர் முனிசாமி முதலியார் அண்டு சன்ஸ்,
சிவகாமி விலாச அச்சுக்கூடம், சென்னை.

## ஜயவீரன்

இது முதல்முதல் சில நூற்றாண்டுகட்குமுன் பிரசித்திபெற்ற பிரஞ்சு கதாசிரியரான அலெக்ஸாண்டர் டூமாஸ் என்பவரால் பிரஞ்சுப் பாஷையில் எழுதப்பட்ட உண்மையில் நடந்தேறிய சரித்திர சம்பந்தமான கதை இந்தக் கதையில் நிகழும் அதிசய சம்பவங்களையும் காதல், வீரம், உண்மை முதலியனவும் கண்ட ஐரோப்பாத் தேசத்தினர் யாவரும் தத்தம் பாஷையில் இவ்வரிய கதை மொழிபெயர்த்துப் படித்து இன்புறுகின்றனர். தமிழில் இப்பொழுதுதான் மொழி பெயர்க்கப்பட்டு வெளிவந்தது. இதன் முதற்பதிப்பு மிக விரைவில் செலவழிந்து விட்டதால் இப்போது இரண்டாம் பதிப்பு அதிக பக்கங்களுடன் முன் பதிப்பில் விடுபட்டிருந்த 25 அத்தியாயங்க ளடங்கிய இரண்டாம் பாகத்தையும் ஒன்றாய்ச் சேர்த்து புதிதாக அச்சிடப்பட்டது. விலை ரூ. 1 12 0

## சிவலோகக் கிரிமினல் கேஸ் 0 12 0

இதில் சர்வசாஸ்திர, சர்வசமய சம்மதமாக ஞான விஷயங்களை விகட வகையால் விளக்கியிருப்பதோடு தெய்வம் ஒன்றேயென்னும் வாதமும், சிவஞான சாத்திரத்தை வைத்திய பாகமாகப் பேசுவதும், சிவம் டிராமா நடத்திஞரென்பதும் அதன் அரிய பெரிய ரகசியங்களும், சிவஞான முனிவர் வேதாந்தஷாப் வைத்திருந்தா ரென்பதும், தாயுமானவர் முதலியோர் சாக்ஷிபகர்வதும், மாயாவாத பஜார் முதலிய கடைபேதங் கூறுவதும், சிவம் அநாதி யென்பதும், சிவத்தின் குடும்பம் வியாபாரம் முதலியவைகளைப்பற்றிய விகடங்களும் மிக்க அருமையாக இருக்கும்.

## தாய்க்கிழவிகள் தளுக்கு 0 8 0

செவிலித்தாயரென அரும்பெயர் பூண்ட தாய்க்கிழவிகள் (பறவை தேடி கண்ணியின்மேல் இலக்குவைத்துத் திரியும் வேடுவனேபோல்) ஆடவரைத் தம்மாயவலைக்குள் சிக்க வைத்துக் காமப்பித்தேற்றி அடிமை கொள்ளும் அதியத்புத தந்திரோபாயங்களும் காகசம் பெருத் தசமத்காரமும் வஞ்சகமிஞ்சிய கருத்துக்களும் அடங்கியது.

## பெண்கள் நீதிவிளக்கவிஞவிடை 0 12 0

பெண்கள் கற்பொழுக்கங்களிற் சிறந்து விளங்குதற்கு அவசியமான அரிய நீதிகள் அநந்தம் எழுதப்பட் டிருக்கின்றன பண்டைய நீதி நூல்களினின்று அரிய மேற்கோள்கள் எடுத்தெழுதி யிருப்பதோடு கருத்துக்களும் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன. சாவித்திரி, நளாயணி, தமயந்தி முதலிய அநேக கற்பரசிகளின் வரலாறுகள் மிக எளிய நடையில் எழுதப்பட்டிருப்பதால் பெண்களும் சிறுமிகளும் இதனைப் படித்து நல்ல ஒழுக்கங்களையும் சிறந்த கீர்த்தியும்பெற்று இன்பமடையலாம்.

## ஞான போதினி 0 8 0

இது ஒரு அரிய நூல் இந்நூல் மனிதர் முக்கியமாய் அறியவேண்டிய கடவுள் தன்மை, அவாது, அருட்டிறம், உடல் பாதுகாக்குமுறை மனத்தைப் பரிசுத்தமாய் வைத்திருக்கவேண்டிய வழி. சமயங்களின், பாகுபாடு, கோயில்கள் அமைத்திருக்கும் தத்துவரகசியம், முதலிய ஞானசாதகமான விஷயங்கள் அடங்கியது. படத்துடன்.

